

சென்னை கடற்கரைக் காட்சி

# முரளீதரன்





இது

மலைமகள்

எழுதியது



'விவேகபோதினி' ஆபீஸ்

திருவல்லிக்கேணி, மதராஸ்

பிரசுரம்

1914



[விலை அணா :

| அத்தியாயம் | பொருளடக்கம் | பக்கம் |
|---|---|---|




## சித்திரப்படங்கள்

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 16 | 28 | வந்திருப்பதாவும் | வந்திருப்பதாலும் |
| 17 | 16 | திருசிரபுரம் | திரிசிரபுரம் |
| 27 | 24 | சிறித்துக்கொண்டே | சிரித்துக்கொண்டே |
| 34 | 33 | தனயன் | தமயன் |
| 61 | 13 | பசீ | பசி |

# முன்னுரை

நாவல் என்பது கற்பனைக்கதையென்பதை நந்தமிழ்நாட்டுமக்களெல்லோரு மறிவார்கள். நம் பரதகண்டமே கல்விக் களஞ்சியமாயிருந்து கதைகளுக்கு உறைவிடமா யிருந்த போதிலும், நாவல் என்னும் கற்பனைக் கதைகள் மேனுடுகளிலேயே பிறந்து வளர்ந்தவை. தேசசரித்திரவிஷயங்களையும், நாட்டுப்பழக்கவழக்கங்களையும், தேசாசாரவிஷயங்களையும், அவற்றின் சீர்திருத்தங்களையும், மத விஷய உண்மைகளையும் சித்திரத்தில் காட்டுவது போல் தெளிவா யறிவித்தலில் நாவல்களைக் காட்டிலும் சிறந்த ஸாதனங்களில்லை. கதைப்போக்கிலேயே வெகு அழகாய் இவைகளை எடுத்துக்காட்டுவதுடன், தம் கதாநாயக நாயகிகளின் குணாதிசயப் பெருமையினாலும் மனோநிலையினாலும் தம் அந்தரங்க அபிப்ராயங்களையும் வெளியிடுவதினால் மானிடப் பிறவியின் சரித்திரத்தையறிதற்கு இவைகளே முக்கிய ஆதாரங்களாகின்றன. ஆகவே நாவல்களின் அழகுநயங்களையெல்லாம் உள்ளபடியறிய விரும்புவோர் முதனூல்களையே படித்தறியவேண்டு மல்லாது, அவைகளின் மொழி பெயர்ப்புக்களை ஒருபோதும் நம்பலாகாது. ஆங்கிலத்தில் உள்ள நாவல்களின் சுவையை அனுபவிக்கவேண்டுமாயின், ஆங்கிலத்திலேயே படிக்க வேண்டு மல்லாது கேவலம் அவைகளின் மொழிபெயர்ப்புக்களைப் படித்தல் நலமன்று. சிலர் ஆங்கில நாவல்களைத்தழுவி அவைகளிலுள்ள அழகு நயங்களை விடாது காண்பிக்க முயன்றிருக்கலாமாயினும், அவர்களால் அது முற்றும் முடியாத காரியம். ஒரு தேசத்தாரது நடையுடை பாவனை, நாகரிகம், அபிப்ராயங்கள் முதலியவைகளை அத்தேசத்தாரது பாஷையில் வெளியிட்டால் அழகு பெறுமேயன்றி, அந்நிய பாஷையில் மொழிபெயர்த்தல் தகுதியாமோ?

நிற்க, மேற்கூறிய வண்ணம் அனேக நாவல்கள் தற்காலம் தமிழ்மொழியிலும் வெளிவந்து கொண்டிருக்கின்றன. உண்மையில் நாவல்களின் லக்ஷணங்களைப்பெற்றுள்ள தமிழ்ப்புத்தகங்கள் வெகுசில. ஆனாலும் கொஞ்ச காலத்திற்கு முன்னிருந்தது போலிராமல் தற்காலம் மேனாட்டு நடையைத் தழுவியுள்ள தமிழ் வசனநூல்கள் வெளிவந்து கொண்டிருப்பது நற்குறியே என்று நாம் கருத வேண்டும். இப்படி மேனாட்டுக் கதைப்போக்கில் ஈடுபட்டு நந்தமிழுலகிற்கும் தமிழ் மக்களுக்கும் அத்தகைய சக்திகளும் இராமற் போகவில்லையென்று காண்பிக்கும்பொருட்டே நம் மூளீதாஸனும் வெளிவந்ததுபோலும்! மூளீதாஸனைப் படித்து முடித்தபின்னரே, அதன் பெருமையை யறியவேண்டியதாயினும் படிப்பதற்கு முன்னால் அதன் அமைப்பின் சிறப்பை ஒருசிறிது எடுத்துக் காட்டுவது தவறாகாது என்பது நமது எண்ணம்.

மிகவும் ஆனந்தத்துடன் எல்லாரும் கருதக்கூடிய மாசற்ற இளம்பருவத்து இன்பத்தையும், நம்மதத்திற்குரிய சிறந்த விவாஹ விமர்சைகளையும், அவ் விவாஹகாலத்தில் ஏற்படும் கோலாஹலங்களின் அழகையும், ஜகத்ரக்ஷகியாய், ஸர்வஜீவதயாபரியாய், ஜகன் மாதாவாய் விளங்கும் ஈச்வரியின் சிறப்பையும், அவளது பக்தியிலீடுபட்டு நிற்கும் பக்தகோடிகளின் உயர்வையும், இக்காலத் துள்ள சில மாமியர்களின் அமுலையும், கடற்கரைக் காட்சியையும், ஆலய வழிபாட்டில் ஏற்படும் ஆரவாரங்களையும் உள்ளதை உள்ளபடி வர்ணித்தல் எவ்வளவு மனோஹரமா யிருக்கிறது! உண்மை நட்பின் பெருமையும், ஊராருடன் வீண்வம்புபேசுவதனுல் வரும் தீங்கும், அன்புள்ள காதலர்களின் மனோநிலையும், பொறுமையின்சிறப்பும் ஆங்காங்கே கதைப் போக்கிலேயே எடுத்துக் காட்டப்பட்டிருந்தால் அவைகளைப்பற்றித் தனியே விவரித்தலும் வேண்டுமோ? சித்திரமெழுதுவோன் தன் சித்திரத்தால் அதைப் பார்ப்போரது மனதை எப்படிக் களிப்பூட்டி தன் வசமாக்குகிருனே, அதேமாதிரிதான் நூல்விஷயத்திலும். நமது நாவலாசிரியர் பொறுமை என்னும் விஷயத்தை எடுத்துக்கொண்டு தம்ஸாமர்த்தியத்தினுல் பல அங்கங்களை ஏற்படுத்தி எவ்வளவு அழகாய் கதையைப் புனைந்துள்ளார் என்பது இதைப் படிப் போருக்குச் செவ்வனே விளங்கும்.

தமிழ்நாட்டிற்கு நாவலின் சிறப்பை எடுத்துக் காட்டவந்த மலேமகள் போல் ஏனையோரும் இத்துறையில் உழைத்து சிறப்படைய வேண்டுமென் பதே, நம் மனப்பூர்வமான கோரிக்கை.

பதிப்பாசிரியர்



உ

ஸ்ரீ ஆஞ்ஜநேய பாஹி

# முரளீதரன்



## முதல் அத்தியாயம்

### பிரதம தர்சனம்

"ஹா! ஹா! என்ன ஆச்சரியம்! என்ன அலங்காரம்!! தோழா! தலையை நிமிர்ந்து உன் யோசனையை விட்டு இதைப்பார்! விளக்குகள் ஒழுங்காய்ப் பிரகாசித்துக் கொண்டிருப்பதையும் பல வர்ணக்கடிதங்களை அநேகவகைப் புஷ்ப தினுஸுகளாய் விநோதமாகக் கத்தரித்து இடை இடையே ஸரம்ஸரமாய்தொங்கவிட்டிருப்பதையும், மேலே தினுஸு தினுஸான கொடிகள் பறப்பதையும், முன்பக்கத்தில் அநேக தொட்டிகளில் ஸுகந்த மலர்களுடன் கூடிய செடிகள் வைக்கப்பட்டிருக்கும் நேர்த்தியையும், இருபுறமும் கையில் தடி பிடித்த காவலர்கள் நின்றிருக்கும் ஏற்பாட்டையும், தெருவில் இருமருங்கிலும் கனவான்கள் ஏறிச் செல்லும் பலவகை வாஹனங்கள் நிற்கும் நேர்மையையும் பார்த்தால், இது ஏதோ இந்திர ஸபையை நிகர்த்ததாகத் தோன்றுகிறது. ஸமீபத்தில் போய்க் கேட்டறியலாம் வருகிறாயா?" என்று நடராஜனென்னும் சிறுவன் தனது நேசனாகிய முரளீதரனென்பவனைக் கேட்டான். பிறகு இருவருமாக அவ்வலங்கார மாளிகையின் அருகடைந்து, அங்கு நின்றிருப்பவர்களை விசாரித்ததில், சற்று இடக்குக் குணமுள்ள ஒருவன் அவர்களைப்பார்த்து "அப்பன்மார்களே! நீங்களென்ன? இந்த உலகத்திலேயே வஸிக்

கிறவர்களாகத் தோன்றவில்லையே? அந்தரவாஸிகளோ அல்லது பாதாளத்தில் இருப்பவர்களோ? ஒன்றுமே தெரியாத உத்தமர்களாக இருக்கிறீர்கள்" என்று நகைத்தான். மற்றொருவன் "பாவம், ஏனடா கேலிசெய்கிறாய்? அவர்களைப் பார்த்தால் உயர்ந்த குலத்தில் உதித்தவராகக் காணப்படுகிறது; எப்படி இருந்தாலும் நாம் அம்மாதிரி அவமரியாதையாய் வார்த்தையாடலாகாது. உனக்கு எப்பொழுதும் வாய்த் துடுக்கு ஜாஸ்தி" என்றுரைத்து, அவர்களை நோக்கி, "ஸாமீ! இன்று இங்கிலாந்தில் ஐந்தாவது ஜ்யார்ஜ் ஆகிய நமது மாட்சிமை தங்கிய சக்ரவர்த்தியாருக்கு முடிசூட்டு வைபவம் நடந்தேறுகிற படியால், அவர் ஆட்சிக்குட்பட்ட நமது தேசமெல்லாம் மனப்பூர்வமான குதூஹலத்துடன் ஜ்வலிக்கவேண்டுமென்பதைக் கருதி அநேகர் அநேகந்தினுஸாய் ஸந்தோஷங் கொண்டாடுகிறார்கள். இவ்வூரில் பிரபல தனவந்தரான நாகை ஜகன்மோஹனராவ் என்பவர் தமது உல்லாஸமந்திரத்தில் இவ்விடத்திய இந்துபாடசாலையில் கல்விகற்கும் கன்யாமணிகளைக் கொண்டு, சக்ரவர்த்தியார் பேரில் வாழ்த்துப்பாடல்கள் கூறும்படி செய்வித்து அவர்கள் மனங்களிக்கப் பரிசளித்து அனுப்புவதாக ஏற்பாடு செய்திருக்கிறார். அதன்படி இம்மாளிகையில் சேர்ந்திருக்கும் பாலிகைகள் களிப்புடன் திரும்பும் சமயம் ஆயிற்று. ஆகையால், தாங்கள் சற்று விலகிப்போய் விடுங்கள்" என்றுரைத்துத் தன் காரியத்தில் கண்ணுயிருந்தான். சிறுவர்களிருவரும் இதைக்கேட்டு வியப்படைந்து, பத்தடி தள்ளி நின்று, நடப்பதைக் கவனித்திருந்தார்கள். சில நிமிஷம் கழிந்தவுடன், மின்னல் கொடிகளைப் போலும் ஒளி வீசும் இளம்பெண்கள் ஒருவர் பின்னொருவராய்ச் சிரித்த முகத்துடன் வெளிவந்தனர். அவரவர்கள் வீட்டுப் பெயரைச் சொல்லி ஒரு ஸேவகன் எடுத்த குரலில் கூப்பிட, வண்டிகள் ஒவ்வொன்றாய் வர, ஏறி, அவரவர் வீடு சென்றனர். கடைசியாக பத்துவயதுள்ள ஓர் பிராமணச் சிறுமி, செந்தாமரைச் செல்வி, சிந்தை மகிழ்ந்து நடனம் செய்யும் மதிவதனம் துலங்க, இடையில் வெண்பட்டணிந்து, பொறுக்கி எடுத்தாற்போல விலையுயர்ந்த நாலைந்து ஆபரணங்கள் தரித்துக்கொண்டு, இயற்கையாய் ஜகதீசனால் தனக்கு ஏற்பட்டிருக்கும் அழகைக் கெடுத்துக் கொள்ள விரும்பாதவளைப்போலக் காணப்பட்டாள். அப்பெண்மணி வெளிவந்து நின்றவுடன், ஸேவகன், "ஹைகோர்ட் வக்கீல் வெங்கடேச்வர ஐயர் வண்டி" என்று சத்தமிட்டவுடன், இரண்டு பெரிய வெள்ளைக் குதிரைகள் பூட்டிய ரப்பர்டயர் லாண்டோ ஒன்று வந்து

நின்றது. உடனே அச்சுந்தரியும் அவ்வீட்டாரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு, நகைமுகத்துடன் அதில் ஏறினள். வண்டியும் வீடுநோக்கிச் சென்றது. இதைக் கவனித்திருந்த முரளீதரன், "நடராஜா! அந்தப் பெண்ணைப் பார்த்தாயா? இத்தனை பேர் வந்து போனவர்களைவிட அழகிலும் குணத்திலும் சிறந்தவளாகக் காணப் படுகிறுள். அவன் என்ன சொன்னன்? ஹைகோர்ட் வக்கீல் பெய ரென்ன? ஞாபகமில்லை" என, நடராஜன் சிரித்துக்கொண்டு, "பேஷ்! இப்போ நீ இருக்கும் நிலையில் இவ்வளவுதூரம் நீ சொல்லி யதுகூட மிகவும் ஜாஸ்தியே! பெயரா? வெங்கடேச்வா ஐயரென்று சொன்னன்" என்றுன். அவன், "நேசா! என்ன கேலி செய் கிறுயே? பெயரை மனதில் பதிய வைத்துக்கொள்ள நான் சிறிது ஏமாந்து போனேன். அதற்காக நீ இப்படி பரிஹஸிக்கலாமா?" என, இருவரும் கொஞ்சநேரம் வேடிக்கைகளைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு, மணி எட்டாகவே, ஹோட்டலிருக்குமிடம் நோக்கிப் புறப்பட்டார்கள். நடராஜன், "நண்பா! இன்றெட்டாம் நாள் நாம் காலேஜுக்குப் போகவேண்டாமோ?" என, "ஆம், தவருமல் திங்கட் கிழமை காலையில் சென்னையில் இருக்கவேண்டும். நடுவில் தஞ்சையில் ஒருவேளை தங்கி, மாமாவைப் பார்த்துவிட்டுப் போக வேண்டியதைத் தவிர வேறு வேலை கிடையாது," என்று முரளீ தரன் உரைக்க, இருவரும் 'க்ளப்பில்' நுழைந்தனர்.

# இரண்டாவது அத்தியாயம்

## இளம்பருவத்தின் இன்பம்

நாகை என்னும் திவ்ய ஸ்தலத்தில் விசாலமாகவும் அலங்காரத்துடனும்கூடிய வீதியிலிருந்த உந்நதமான அழகியமாளிகையொன்றில் ஒருநாள் ஸாயங்காலம் சில பாலிகைகள் கூடி விளையாடிக்கொண்டிருந்தனர். அவர்களைக் கவனித்தால் எக்குலத்திற்கும் மேலான ப்ரஹ்மகுலத்தைச் சேர்ந்தவர்களென்பது அவர்கள் முகத்தில் வீசும் தேஜஸினாலேயே நன்கு விளங்கும். அவ்வீட்டிற்கு உரியவரின் புத்திரியாகிய நீலலோசனி என்னும் கன்யாமணியும், அவள் பள்ளி நேசிகளான மீனாக்ஷி, அம்மணி, த்ரிபுரஸுந்தரி, குட்டியம்மாள் முதலியவர்களும் வட்டமாய்த் திண்ணையின் ஒரு பக்கத்தில் உட்கார்ந்து, கையில் களச்சிக்காயில் ஏழு சிறியதாய்ப் பொறுக்கி வைத்துக்கொண்டு, முதலில் யார் ஆட ஆரம்பிக்கிறதென்று விவாதம் செய்து கொண்டிருந்தனர். வயதில் சற்றுப் பெரியவளான அம்மணி மற்றவர்களைக் கையமர்த்தி, "ஏண்டி மூத்தமரம் காய்க்குமோ? இளையமரம் காய்க்குமோ? நான் தானே பெரியவள்; அதனாலே நான்தான் முன்னாடி ஆடுவேன்" என்றாள். எல்லாருக்கும் இளையவளாகிய அஞ்சிக்கையற்ற ஸ்வபாவமுள்ள குட்டியம்மாள், மெள்ள, "அம்மாடீ, ஒடைஞ்சு போப்போறது; பொறக்கறபோதே நீ இப்படித்தான் இருந்தாப்பிலே இருக்கு. சின்னவளா யிருந்து தானே பெரியவளாப் போனே? அதனாலே சின்னவள் ஆடி, அப்பறந்தான் பெரியவள் ஆடணும்" என்றாள். நீலலோசனி, எல்லாரையும் நோக்கி, "ஆர் முன்னாடி ஆடினாலென்ன? அதற்கு இத்தனை சண்டைவேணுமா? நம்ம அஞ்சுபேர் பேரையும் துண்டு கடுதாசுகளில் எழுதி ஒரேமாதிரியாக மடிச்சுக் குலுக்கிப் போடுவோம். யாருடைய பேர் அகப்படுகிறதோ, அவாள் தான் முன்னாடி ஆடுகிறது," என்றாள். மற்றவர்கள், "ஆமடி நீலா! நீ சொல்லுகிறது நெஜந்தான். நான், நீ யென்று சண்டை போடாமல், இந்த வழி தேவலேம்மா. ஆயிரம் இருந்தாலும் அவ சமத்து சமத்துதான். இந்த யுக்தி நம்ம ஆருக்கானும் தோணித்தா?" என்றார்கள். அவர்கள் ஏற்பாட்டின்படியே ஐந்து துண்டுக் கடிதங்களில் பெயரெழுதி மடித்து நீலலோசனி குலுக்கி நடுவில் போட்டுவிட்டு, "அம்மணி, நீயும் வேண்

டாம், குட்டியம்மாளும் வேண்டாம். மீனு! நீ எடு, பார்க்கலாம்" என்றாள். அப்படியே அவள் ஒன்றை எடுக்க, "திரிபுரம்" என்று எழுதியிருந்தது. காயை அவளிடம் கொடுத்து ஆடச்சொல்லினர். அவளும் ஸந்தோஷத்துடன் அதை வாங்கி, "கட்டெட்வச்சார்க்குக் காப்பணம், முட்டிக்கொண்டார்க்கு மூணுபணம்" என்று ஆட ஆரம் பித்தாள் (கட்டை என்பது களச்சிக்காய், ஆடத் துவக்கும் முதல் எண்ணிக்கை). இந்த விளையாட்டில் இவர்கள் இருக்க, வெங்கடேச்வர ஐயர் ஸஹோதரி மங்களவல்லி என்பவள் அங்கு வந்து, "கண்ணே! நீலா! எவ்வளவு நாழிகை நீ விளையாடுவாய்? முக மெல்லாம் வியர்வையைப் பார்? இப்படிக் காட்டு, துடைக்கிறேன். இன்னிக்கு ஆடிவெள்ளிக்கிழமையாச்சே, கோவிலுக்குப்போகவேண் டாமா? ஆடினது போரும் எழுந்திரம்மா, ஸாயரக்ஷை வேளையில் ஆடலாகாது. 'பேயாடும் வேளையில் பெண்ணுடலாகாது' என்று பெரியவாள் சொல்வார்கள். போய் முகத்தைத் துடைத்து சாந் திட்டுக்கொள். மன்னி வருகிறாளாவென்று கேட்டு நான் அழைத்து வருகிறேன்" என்றுரைத்து உட்சென்றாள். நீலலோசனியும் தன் அத்தை சொன்னவுடன் எழுந்து பாவாடையிலுள்ள தூசியைத் தட்டிக்கொண்டு, "நீங்களெல்லாரும் கோவிலுக்கு வரேளோ, ஆத் துக்குப் போகப் போரேளோ?" என்றனள். உடனே அம்மணி என்பவள், "பார்த்தயாடி மீனு, அவா அத்தை வந்து கோவிலுக் குப் போகணும்னு சொன்னுடனே, என்னத்தையோ நெனைச் சுண்டவளைப்போல நீலாம்பாள் எழுந்திருந்துட்டா, அது என்ன என்று ஒனக்குத் தெரியுமா? அவளுக்கு நல்ல ஆம்டையான் வேணு மின்னு அம்மனைப் பிரார்த்தனை பண்ணிக்கணும்னு நெனைச்சுண் டாப்பலே இருக்கு. ஏண்டி நீலா! அப்படித்தானே? நாஞ்சொல் றது நெஜமோ பொய்யோ" என்றாள். அதற்கு நீலலோசனி, "வெகு கெட்டிக்காரி, என்ன ஜோஸ்யண்டா அப்பா?" எனவும், குட்டியம்மாள், "ஆமாம், அங்கே என்ன இருக்கு! ஸ்வாமியை பிரார்த்தனைபண்ண கோவிலுக்குத் தான் போகணுமோ? இங்கே ருந்து சொன்னக்கே அவருக்கு காது கேக்காது போலேருக்கு, நம்ம வாத்தியாரம்மா கூட நேத்திக்கிச் சொல்லலையா? 'நீங்களெல் லாரும் அஞ்ஞானிகள், மெய்யான தேவனை அறியவில்லை. மேலும், இப்மாதிரி மனுஷன் கையினுல் பண்ணப்பட்ட ஒரு கற்சிலையை வைத்துக்கொண்டு ஸாமி, ஸாமி, என்று அதை வணங்கி, நிஜமான தேவனுக்குக் கோபமுண்டாக்குகிறீர்கள்' என்று சொன்னதோடே,

இன்னம் என்னென்னமோ வெல்லாம் நேத்திச்குச் சொல்லலேயா ? நீங்கள் எல்லாரும் கேட்டுண்டு தானே இருந்தேள் " என்றாள். நீல லோசனி "அதற்கு இப்போ என்ன பண்ணணும் என்கிறே? கோவி லிலே ஸ்வாமி இல்லே, நான் வரமாட்டேன்னு சொல்லச் சொல் ரையா ? ரொம்ப நன்னாருக்கு! அவள் பிறமதத்தவள். கிருஸ்த வச்சி அன்னோ ? அவா மதப்படி அவள் சொல்றா. அவளைப்படி. தன் மதம் நிச்சயமென்னு நம்பியிருக்கிறாளோ, அந்தமாதிரி நம்ம மதத்தைப்பற்றி நாமெண்ணிக் கொண்டிருப்போமென்பதை மறந்து போய்விட்டாப்போலே இருக்கு; அதுக்காக நாம் கோவிலுக்குப் போகாமலிருக்கலாமோ ? ரொம்ப நன்னாயிருக்கு உன் யோசனை " என்றுரைத்து, சரேலென்று உள் நுழைந்து, முகத்தை அலம்பித் துடைத்து பளபளவென்று மின்னும் நெற்றியில், கரிய சாந்தினால் பொட்டுவைத்து, கலைந்திருக்கும் முன்னெற்றி மயிரை ஒழுங்கு படுத் திக்கொண்டு தாயினிடம் வந்து " அம்மா ! தேங்காய், பழம், கற் பூரம் வாங்கி வைச்சிருக்கையோ ?" என, அவ்வம்மணியும் அவளை அணைத்து முத்தமிட்டு, "கண்ணே ! எல்லாம் எடுத்துத் தட்டில் வைச்சு சிவராமனிடம் கொடுத்தேன். அவன் முன்னாடி போய் விட்டான். அத்தை எங்கே ? கூப்பிடு, நாமும் தீபாராதனை காலத் திற்குள் போய்ச் சேரலாம்," என, மங்களவல்லியும், "ஏன் மன்னி, தாமதம் ?" என்றுரைத்துக்கொண்டே அங்கு வந்தனள். "ஒன்று மில்லே. உங்களுக்காகத்தான் காததிருக்கிறேன்," என்று புறப்பட் டதும், எல்லாரும் சேர்ந்து கோவில் நோக்கி நடந்தனர். நீலலோ சனி தன் ஸகிகளுடன் கைகோத்துப் பேசிக்கொண்டு பத்தடி முன் செல்ல, கோபுரவாயிலின் அருகடைந்தவுடன், மங்களவல்லி அவளை அழைத்து, மிருதுவாகிய அவளது கரத்தைத் தன் கையில் பிடித்துக்கொண்டனள். மிகவும் விசேஷமான சுக்கிரவாரமாகை யால், கூட்டம் நிரம்பவும் அதிகமாக இருந்தது. இவர்கள் கொஞ்ச நேரம் பிராகாரத்தில் நின்றிருந்து, கும்பல் சிறிது கலைந்தவுடன் ஸ்ரீகாயாரோஹணேச்வரரைத் தரிசித்து அர்ச்சனை செய்வித்து, அம்பாள் ஸந்நிதி அடைந்து, ஸஹஸ்ர நாமார்ச்சனை செய்துமுடிக் கும் வரையில், அவரவர்கள் இஷ்டஸித்திகள் பரிபூர்ணமாகும் வண் ணம் கருணைகடாக்ஷியான நீலாயதாக்ஷியை மனமுருகி ஸ்தோத்திரம் பண்ணி நின்றிருந்தனர். மங்களஹாரத்தியானவுடன் பிரஸாதம் வாங்கிக்கொண்டு அம்பிகையை நமஸ்கரித்து, விடைபெற்று வீட் டிற்குத் திரும்பினார்கள். அன்று நிலவு மிகவும் இனிமையாய்க்

களங்கமற்றுப் பிரகாசித்தபடியால், ஜகதீச்வரியைப் பார்த்துக் களித்த மனதுடன் வரும் அப்பெண்மணிகளின் உள்ளம் சொல்லரிய ஆனந்தத்தில் அமிழ்ந்து, அம்மன் அன்று இருந்த அழகை வர்ணித்துக்கொண்டே வீடுவந்து சேர்ந்தனர். நீலலோசனியின் தோழிகளெல்லாரும் அவளிடம் சொல்லிக்கொண்டு தங்கள் தங்கள் மனைக் கேகினர். உடனே நீலலோசனி தனது புஸ்தகங்களை எடுத்துவந்து தீபத்தருகிருந்து, திங்கட்கிழமைப் பாடத்தைப் படித்து விட்டுப் பழைய பாடங்களையும் படித்தனள். இதற்கிடையில் ஜோட்டோசை காதிற்பட, உத்யோகத்திற்குப் போய்க் களைத்துவரும் தனது அன்புள்ள தந்தையை வரவேற்க அவஸரமாய்த் தெருவை நாடிச் சென்றனள். ஐயரவர்கள் உள்நுழைந்ததும், தனதருமைச் செல்வியின் மலர்முகம் நோக்கிக் களித்த மனதுடன் குழந்தையை அணைத்து முத்தமிட்டு, "அம்மா! நீ சாப்பிட்டாச்சா?" என, "இல்லை அண்ணு, உங்களுக்காகத்தான் காத்திருக்கிறேன்" என்றுள். அவர், "அப்படியா? இதோ வந்துவிட்டேன்" என்று உடுப்பு களைந்து வைக்கும் அறையை நாடிப்போயினர். பிறகு வெங்கடேச்வர ஐயரவர்கள் ஸ்நாநம் செய்து, ஸந்தியாவந்தனம் முடித்து வந்து இலையில் அமர்ந்தனர். நீலாம்பாளும் கூட உட்கார, ஐயர் ஸகோதரியைப் பார்த்து, "ஏன் மங்களம்! நீயும் உட்காரேன்" என, "இல்லை அண்ணு, மன்னி ஒண்டியாய் சாப்பிடுவாள். நானும் அவளுடன் சாப்பிடுகிறேன்" என்றுள். "உங்கள் மன்னி இப்போ உட்காருவதை நான் வேண்டாமென்கிறேனு? இங்கே ஆரு அன்னியர்களிருக்கிறுர்கள்? எவ்வளவுதான் சொன்னுலும், கர்னுடக ஸம்பிரதாயத்தை விடுகிறதில்லை. தனியாய் உங்களுக்கொரு பந்தியா? உங்க மன்னி எங்கே? கூப்பிடு அவளையும். இரண்டு பேரும் உட்காருங்கள்" என்று சற்று உரத்த குரலில் சொல்லவே, பரிசாரகன், நீலலோசனியின் பக்கத்தில் இரண்டு இலைகளைப்போட்டுப் பரிமாறினுன். மங்களவல்லி வந்து ஓர் இலையில் அமர, சிவகாமி அம்மாள் யாவருக்கும் அன்னம் படைத்தவுடன், நெய் பரிமாறிவிட்டு, தனக்காக இடப்பட்டிருந்த இலையில் உட்கார்ந்தனள். இவ்விதம் சாப்பாட்டு ஸம்பிரமம் முடிந்தவுடன், ஐயரவர்கள், பத்நி புத்ரியுடனும், அருமை ஸஹோதரியுடனும் நிலவில் அமர்ந்து, தாம்பூலதாரணம் செய்துகொண்டு வேடிக்கையாய்ப் பேசியிருந்தவர், நடுவில் ஏதோ ஞாபகம்வர, பெண்ணை அழைத்து, "கண்மணீ! எனது கைப்பெட்டியில் மேலாக ஒரு கடிதம் வைத்திருக்கிறேன். அதை எடுத்துவா"

னன், அக்கன்னிகையும் அவருத்தரவுப்படி கொண்டுவந்து கொடுத்தனள். மங்களம், "அண்ணு ! கடிதம் யாரிடத்திலிருந்து வந்திருக்கிறது? தஞ்சாவூரிலிருந்தா ?" என, அவர் நகைத்து, "உனக்கு எப்பொழுதும் அவ்விடத்திய ஞாபகந்தான். ஆனல் இது உங்களவரிடத்திலிருந்து வரவில்லை. திருச்சியிலிருந்து ஒரு பெரிய மனிதர் எழுதியிருக்கிறர். அவருக்கு பத்தொன்பது வயதில் ஒரு குமாரன் இருக்கிறன். இந்த வருஷம் பீ. ஏ. பரீக்ஷைக்குப் போகிறன். பிள்ளையாண்டானை நான் பார்த்திருக்கிறேன். பார்வைக்கு லக்ஷணமாய்த்தானிருக்கிறன். மாதிரியைப் பற்றியும் எல்லாரும் திருப்தியாகத்தான் சொல்லிக்கொள்ளுகிறர்கள். அவனுக்கு நமது குழந்தையைக் கேட்டு எழுதியிருக்கிறர். நம் செல்வத்திற்கும் விவாஹ காலம் நெருங்கிவிட்டபடியால், நாமும் இதைப்பற்றி யோசிக்கவேண்டியது அவசியம் தானே" என்றர். சிவகாமி அம்மாள், நாத்தனரைப் பார்த்து, "என்ன அக்கா, குலந்தெரியாமல் கோத்திரம் தெரியாமல் யோசிக்கவாவது ? முதலில் அவஸரப்பட்டு ஒன்றில் தலையிட்டுக்கொண்டால், பிறகு பானையா சட்டியா மாற்றுவதற்கு ?" என, ஐயர், "மங்களம்! என்ன உங்க மன்னி தடபுடலாய் ஏதோ பிரஸங்கம் செய்கிறள் ? இப்பொழுது எல்லாம் ஆய்விட்டதா ? தாலி கட்டுவதுதான் பாக்கியோ ? அடி பயித்தியமே ! விஷயம் இப்படி இருக்கிறதென்று சொன்னேன். நானென்ன மடையனு ? மேல் நடக்கவேண்டியதை ஸரிவர யோசிக்காமல் செய்துவிடுவேனு?" என, சிவகாமி அம்மாள், புத்திரியினிடத்திலுள்ள வாஞ்சையினல் அவஸரப்பட்டு வார்த்தைகளைச் சொல்லிவிட்டோமென மனதில் நாணி முகம் சிவந்தனள். இரவு வெகு நேரம் ஆய்விட்டபடியால், யாவரும் நித்திரை செய்யச் சென்றனர்.




## மூன்றாவது அத்தியாயம்

### பிரேமையுள்ள தம்பதிகளும், கலியாணப்பேச்சும்

ஆகாயத்தை நிமிர்ந்து பார்த்தால் அழகிய செவ்வானம் பரந்து பார்வைக்கு ரமணீயமாய் விளங்குகிறது. நாம் செல்லவேண்டிய இடத்தைத் திரும்பி நோக்கினால், பச்சென்ற சோலையுடனும் ஜில்லென்ற நீருள்ள தடாகத்துடனும் சுற்றிலும் கைப்பிடிச் சுவரெடுத்து மாங்குயிலோசையோடும் மனதுக்கு இன்பந்தரும் மந்தமாருதத்துடனும் கூடிய லக்ஷ்மீகடாக்ஷம் பொருந்திய அழகிய பங்களா ஒன்று தென்படுகிறது. துணிந்து உட்சென்றால், முன் பக்கத்தில் நவநாகரிகமென்று சிலர் கருதும் பெயரற்ற பச்சிலைச்செடிகள் பல தொட்டிகளில் வைக்கப்பட்டு அலங்கரித்திருக்கும் தாழ்வாரத்தில் மகமல் தைத்த நாற்காலி ஒன்றில் பொன் காய்த்த மரமென பூஷணமணிந்த பொற்கொடி ஒருத்தி, சித்தமுவந்து தன் ஹஸ்தத்தில் பிடித்த புஸ்தகத்துடன் வீற்றிருந்தனள். அப்பொழுது அம்மாளிகைக் கெதிரில் அழகான இரண்டு மட்டங்கள் பூட்டியவண்டி ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து ஸுமார் நாற்பது வயதுள்ளவரென்று சொல்லக்கூடிய ஸுந்தரபுருஷர் இறங்கி பங்களாவை நோக்கி நடந்தனர். வந்தவர், நாற்காலியின் பக்கத்தில் வந்து "குட் ஈவினிங்" என்று கூறவே, அவள் திடுக்கிட்டு எழுந்து நின்றாள். "என்ன, வந்தவனைக்கூடத் திரும்பிப்பாராமல் வாசிப்பு மிகப்பிரமாதமாக இருக்கிறதே! அப்படி ஸ்வாரஸ்யமாய் என்ன படித்துக் கொண்டிருந்தாய்?" என, அவள், "நன்றாருக்கு, காலம்பர போட்டுண்டுபோன உடுப்பைக்கூட கழட்டி வைக்காமல் இதென்ன கேழ்வை? இது விசாலாக்ஷியம்மாள் போட்ட புஸ்தகமென்று மத்தியானம் ஒருத்தன் வாசலில் விலைக்குக் கொண்டு வந்தான். அவளும் நம்பளைப்போல பொம்மனாட்டி தானே, என்ன தான் எழுதியிருக்கிறாள் பார்ப்போமென்று வாங்கினேன். படிச்ச வாளுக்கும் படியாதவாளுக்கும் வித்தியாஸமில்லையா? அப்போ கையிலெடுத்தவள் இப்போ நீங்கள் வந்தப்புறம் தான் மூடினேன். போருமா விபரம்? இனி மேலாகிலும் உடுப்பு கழற்றலாமா?" என்றாள். அவர், "அவ்வளவு கோபம் வேண்டாம். இதோ கழற்றி விடுகிறேன், அந்த புஸ்தகத்தில் இப்படித்தான் புருஷனைக் கோபித்துக்கொள்ளும்படி எழுதியிருக்கிறதோ?" என்றுரைத்துக்கொண்டே

உள் பக்கம் சென்றார். கூடவே, "நன்றாயிருக்கு கேலி" என்று சொல்லி அம்மாளும் பின் தொடர்ந்தனள். ஐயரவாள் கை கால் முகம் சுத்திசெய்துகொண்டு வந்து, முன் பக்கத்திலுள்ள ஆஸனத்தில் அமரவே, அலமேலு அம்மாள் ஒரு வெள்ளிக் கோப்பையில் 'டீ' ஸகிதம் அங்கு வர, அவர் அவளது முகத்தை நோக்கிப் புன்னகை புரிந்தபடி அதை வாங்கி, ஸந்தியாகாலத்தில் செய்ய வேண்டிய காரியம் அதுவேபோல மிச்சஞ் சிறிதுமின்றி ஆவலுடன் பருகிவிட்டுப் பாத்திரத்தை அவளிடம் அளித்தனர். உடனே, "ஆரடா அங்கே ப்யூன்" என்றழைக்க, வில்லைச்சேவகன் ஒருவன் ஓடி வந்து, கை கட்டி வாய் பொத்தி நின்றான். "எங்கே அம்மாளுக்கு ஒரு நாற்காலி எடுத்துப்போடு" என, அவனும் ஓடிப்போய் ஒன்றைக்கொண்டு வந்து எஜமான் பக்கத்தில் போட்டான். அலமேலு அம்மாளும் அதில் அமர்ந்தவளாய்ப் புருஷனைப் பார்த்து, "மத்தியானம் உங்களுக்கு ஒரு கடிதம் வந்தது, அதை எடுத்து வர மறந்துவிட்டேன். சற்றிருங்கள்; இதோ வருகிறேன்" என்று அவஸரமாய் உட்சென்று ஓர் கடிதத்துடன் திரும்பி வந்து, அதை அவரிடம் கொடுத்தனள். அவரும் அதைப் பிரித்துக்கொண்டே, "கடிதம் வந்தால், உனக்கு இஷ்டமிருந்தால்தான் கொடுக்கிறது; இல்லாவிடில் இல்லைத்தான்," என்று கூறிப் படிக்கலானார். முடிந்ததும் அலமேலம்மாள், "யாரிடத்திலிருந்து வந்திருக்கு? எங்கண்ணா எழுதி யிருக்கானா? மதனி பிரஸவிச்சாளா? குழந்தைகள் ஸவுக்கியந்தானே? என்ன கேட்டதுக்கு பதிலைக்காணோம், என்னமோ சிரிக்கிறீர்களே? எப்பப்பார்த்தாலும் என்ன விளையாட்டு வேண்டிருக்கு? ஏதடா கேழ்க்கிறாளே என்று மனஸிலே படவில்லையே," என்று முணுமுணுத்தாள். ஐயர் சிரித்துக்கொண்டு, "அடி, நீ பேசுவதற்கு இடங்கொடுத்தால்லவோ நான் பதில் சொல்வேன். நீதான் ஒன்றன் பின்னொன்றாக என்னென்னமோ கேட்டுக்கொண்டிருக்கிறாயே! கிடக்கிறது, கோபித்துக் கொள்ளாதே. இது உன் தமையனிடத்திலிருந்து வரவில்லை. நாகப்பட்டணத்திலிருந்து ஹைகோர்ட் வக்கீலொருவர் எழுதியிருக்கிறார். அவருக்கு பத்து பத்தரை வயதில் ஒரு பெண் இருக்கிறது. அதை நமது முரளீதரனுக்குக் கொடுக்க வேணுமென்று முன்னமே கேட்டார். ஆகட்டும் பீ. ஏ., பாஸான பிறகு பார்த்துக்கொள்வோமென்றேன். இப்போ பையனுக்குப் பரீக்ஷை தேறின விஷயம் தெரிந்து, முன் சொன்னதை ஞாபகப்படுத்தி எழுதியிருக்கிறார்" என்றார். அதற்கு அம்மாள், "ஸரிதான்; பெண்ணை நாம் பார்க்க வேண்டாமா?

இந்தக் காலத்துக்கேத்தாப் போல பாட்டு படிப்பு தெரிந்தவளா? இல்லாவிட்டால், பிள்ளை அப்புறம், அப்பா அம்மா வைத்தாளே என நொந்து கொள்வான். மேலும் பிள்ளையாண்டான் படிப்புக்காக இது வரையில் எவ்வளவு செலவழித்திருக்கிறோம், இன்ன மெத்தனை கொடுக்கவேண்டி யிருக்கிறது. இது விஷயத்தில் நம்ம ஸவுகரியத்தையும் அவாள் யோசித்து நடந்து கொள்ளப்பட்டவர்களோ இல்லையோ என்பது தெரியவேண்டாமா? கலியாணமென்றால் கடிதத்தில் ஆய்விடுகிறகாரியமா? எத்தனை யோசிக்கவேண்டி யிருக்கிறது? எவ்வளவு காரியங்கள் பேசி முடிக்க வேண்டியிருக்கிறது? முன்னாடி முரளீதரன் ஸம்மதியைத்தான் கேற்கவேண்டாமா?" என்று ஒரு வகையாய்ப் பேச்சை முடித்தாள். அது வரையில் பொறுமையுடன் கேட்டிருந்த அவர், "என்னடி என்னமோ லெக்சர் கொடுக்கிறாய்? இந்தமாதிரி கடிதம் வந்திருக்கிறதென்று சொன்னேன். பிள்ளையும் நீயும் யோசித்துக்கொண்டு என்ன சொல்லுகிறீர்களோ யுக்தமாயிருந்தால் அந்த மனுஷ்யனுக்கு எழுதிவிடுகிறேன்" என்றுரைத்து, இருப்பிடத்தினின்று எழுந்து, ஏதோ யோசனையுடன் மெது வாகத் தாழ்வாரத்தில் உலாவிக் கொண்டிருந்தனர். அம்மாள், "பிள்ளையும் நானும் யோசிக்கிறதாம், பிறகு இவர் கடிதம் எழுது கிறாராம்" என்று மெள்ளச் சொல்லிக்கொண்டே உள்ளே சென்றாள்.

ஐயரவர்கள் இன்னாரென்பதையும் அவர் உத்தியோகம் இப்படிப் பட்டதென்பதையும் உரையாவிடில் வாசகர்கள் மனம் சிறிது அலைவுறுமாகையால் அதைக்கூறி இவ்வத்தியாயத்தை முடிப்போம். ஐயர் கௌரவமுள்ள பெரிய குடும்பத்தில் பிறந்தவர். சங்கர நாராயணய்யரென்று இருமூர்த்திகளின் நாமதேயத்தை ஒருங்கேபெற்றவர். ஆங்கிலத்தில் இணையற்ற நிபுணரெனப் பெயர் வாங்கினவர். அவரைக்காணும் காரிகைகள் மனதைக் காந்தம்போ லிழுத்துக்கொள்ளும் கட்டழகு வாய்ந்தவர். இக்கலியாணப் பேச்சு நடக்கும் ஸமயத்தில், ஜட்ஜு உத்தியோகத்தில் 650 ரூபாய் சம்பளம் பெற்றுக் கொண்டிருந்தனர். அவருக்கு, பாவம்!—முதல் தாரம், முரளீதரனை ஈன்ற சிறிது காலத்தில் இறந்துவிட்டாள். பிறகு தான் அலமேலம்மாளை மணந்தார். அதுமுதல் இதுவரை குடும்பத்தில் சில்லரைக் கலஹங்கள் ஏற்படாமல் தமது ஸாமர்த்தியத்தினால் நடத்திவந்தார். அலமேலம்மாளுக்கு ராஜமென்று பத்து வயது பெண் குழந்தை மாத்திரம் உண்டு. இவர்கள் குடும்பத்திலினிக் கிளைகள் ஏற்படப் போகிறபடியால் போகப்போக எப்படியிருக்குமோ யாரறிவார்?

## நான்காவது அத்தியாயம்

### இன்பம் நிறைந்த கடற்காட்சி

" நடராஜா ! வருகிறாயா ? ஸமுத்திரக் கரையைப்பார்க்கப் போய்வர லாம்; என்னமோ மனம் ஒரு மாதிரியாக இருக்கிறது " என் றான் முரளீதரன்.

நட :—ஸமுத்திரக்கரை போனால் மனதில் இருக்கும் மாதிரியெல் லாம் தீர்ந்துவிடுமா? அதையாகினும்சொல்லு, கூடவருகிறேன்.

முர :—ஓயாது புஸ்தகமும் கையுமாய் அல்லாடும் நமக்கு சிறிது பொழுதாகிலும் சிரமபரிஹாரம் வேண்டாமா ? ஜனங்கள் அதி கரித்து கோலாஹலமாயிருக்கும் இடத்திற்குப்போய் ஏதாகி லும் நல்ல காட்சிகளைக் காணும்படி என் மனம் விரும்புகிறது.

நட :—பிறகு அவ்விடந்தான், நல்லயிடமென்று அபிப்பிராயமோ? பத்து பெயர் சேர்ந்தவிடத்தில் நாலுபேர் நல்லவர்களி ருந்தால் ஆறுபெயர் பொல்லாதவர்களிருப்பார்கள். ஆனால், அவர்களைப்பற்றி நமக்கு ஒன்றும் அக்கரையில்லை. இதோ பார் ஒரு உதாரணம். பத்து தினங்களுக்கு முன் நான் கொஞ் சம் அலுவலின் நிமித்தம் நார்ட்டன் ஷாப்பிற்குப் போய்விட் டுத் திரும்பும்பொழுது மணி எட்டடித்துவிட்டது. என் ஸ்வ பாவம் உனக்குத் தெரியாதா ? யாராகிலும் ஸோல்ஜர் எதிரில் வந்து கையில்பிடித்த தடியினால் மண்டையில் போட்டு விடப் போகிறானோ என்ற பயத்துடன் எதிரில் வருபவர்களை மிகக் கவனமாகப் பார்த்துக்கொண்டே வந்தேன். என்ன ஆச்சரி யத்தைச் சொல்வேன்! மிக்க தனவந்தரென்றும் குணசாலி யென்றும் ஸுசீலரென்றும் எல்லாராலும் கொண்டாடப்படும் பெரிய மனிதரொருவர், நமக்கு நன்றாய்த் தெரிந்தவர், தனது சோரநாயகியுடன் கடற்கரையை நோக்கி மணலில் செல்லக்கண் டேன். உடனே மரம்போல விறைத்து நின்றேன். சில நிமி ஷத்தில் மனதை திடப்படுத்திக்கொண்டு ஹோட்டல் வந்து சேர்ந்தேன். இதனால் மனோசுத்த முள்ளவர்களுக்கு உஷார் படுத்துவதைப் போலவும் சிறிது சபல சித்த முள்ளவர்களுக்கு நன்றாய்ப்படித்த கனவானே இம்மாதிரி செய்யும்போது நமக் கென்ன என்ற தைரியத்தையும் உண்டாக்கி இம்மாதிரி காரி

யங்களுக்கெல்லாம் இடமும் கொடுக்கிறது. ஆகையால் அன்று முதல் எனக்கு அங்கு செல்வதென்றால் மனதிற்குப் பிடிக்காமல் ஏதேதோ யோசனையெல்லாம் உண்டாகிறது.

முரு:—ஏதாகிலும் உளறாதே. ஏன் அவர் சொந்த ஸ்திரீயாயிருக்கலாகாதா? இப்போதான் இந்திய ஸ்திரீகளெல்லாம் ஆங்கில மாதர்களைப்போல சிறிதுங் கூச்சமின்றி ஆடவர்களுடன் இஷ்டம்போல் உலாவுகிறார்களே! ஆகையால் ஏன் அவர்கள் புருஷன் பெண்சாதியாயிருக்கக் கூடாது?

நட:—போதுமப்பா, என் வயற்றெரிச்சலைக் கிளப்பாதே. நம்ம மலைக்கோட்டை ஸுப்பராம சாஸ்திரிகள் பெண் காமாக்ஷியை எனக்குத் தெரியாதா? மேலும் சதிபதிகளாயிருந்தால் வெவ்வேறு வண்டிகளில் வருவார்களா? அவஸர அவஸரமாய் மனிதப்பழக்கம் இல்லாத விடத்திற்குப்போவார்களா? இதென்னத் திற்கு? ஸுப்பராமசாஸ்திரிகள்மாப்பிள்ளைதான் இம்மாதிரிசெய்தார். கூடப்போனவள் காமாக்ஷியல்லள். போதுமா உனக்கு?

முரு:—அவர் போனால் போகிறார்; நானெந்தப் பெண்ணுடன் போகிறேன்? உன்னைத்தானே கூப்பிடுகிறேன். பூலோக வாஸிகளெல்லாரும் உன்னைப்போலவே ஸகலத்திலும் உண்மையுடனும் பயத்துடனும் இருக்கவேணுமென்றால் முடியுமா? துஷ்ட புத்தியுள்ளவர்கள் அவர்கள் மனப்போக்கின்படிதான் நடப்பார்கள். அச்சமயம் நாம் அமிர்த தாரைபோன்ற சொற்களால் அன்பாய்ப் புத்தியுரைத்தாலும் வேம்பினும் கசப்பாய்த்தோன்றுமேயொழிய கொஞ்சமேனும் ஹிதமாய் அவர்கள் மனதில் படாது. 'செவிடன்காதில் சங்கூதியதுபோலத்' தானாகும்; ஸரி, நீ வா போகலாம், நாழிகை ஆகிறது.

நட:—ஏது, வராமலிருந்தால் விடமாட்டாய் போலிருக்கிறதே! சற்றிரு, உடுத்திக்கொண்டு வருகிறேன்,

என்று மெல்லியதாய் ஒரு சொக்காய் தரித்து மேல் வேஷ்டியை தலையில் சுற்றிக்கொண்டு கையிற்பிடித்த பிரம்புடன் நேசன் பக்கலடைந்து, "உம் புறப்படு" என்றான். இருவரும் கடற்கரையை அணுகினர். இவர்கள் வந்த ஸமயமும் அங்கு வாத்தியம் ஆரம்பிக்கும் நேரமும் ஸரியாயிருக்கவே களித்தமனதுடன் அங்கு போட்டிருக்கும் ஆஸனத்திலமர்ந்து நடக்கும் விநோதங்களை கண்ணுற்றனர்.

கந்தர்வ பொம்மைகளைப் போன்ற வெள்ளைக்காரக் குழந்தைகள் கூட்டமாய், மேற்கூறிய கானத்திற்கு ஸரியாய் குதித்துக்

குதித்துக்கொண்டு ஓடுவதையும், மயக்கும் விழிகளையுடைய ஆங்கிலப் பெண்மணிகள் தங்களின்ப நாயகர்களுடன் அடிமேலடி வைத்து ஒய்யாரநடைபோகும் ஒழுங்கையும், காஞ்சனமணிந்த கண்களையுடைய கட்டழகிகள் கச்சேரிசென்று களைப்புடன் வரும் தங்கள் கணவர்களை காணும் ஆவலுடன், சேலையொத்த விழிகளை நாற்புறமும் செலுத்தி ஆராயும் அருமையையும், நாகரீகம் மலிந்த இந்த நாளிலும் பண்டையகாலத்துப் பழக்க வழக்கங்களை விடாமலனுஸரித்து வரும் மகமதிய கனவான்கள் தங்கள் மனைவிகளை பஞ்சரத்தில் அடைபட்ட அஞ்சுகங்களைப்போல பந்தோபஸ்து செய்துவிட்டுத் தாங்கள் உலாவப்போக, அவர்கள் வெளியில் நடக்கும் வேடிக்கைகளை பார்க்குமாவலுடன் கதவின் சந்தின்வழியே கண்களைச் செலுத்திப் படும்கஷ்டத்தையும், வெளியூர்களிலிருந்து வியாதியி நிமித்தம் வைத்தியருடைய கட்டாயத்தினால் வேண்டாவெறுப்பாய் வண்டியில் வீற்றிருக்கும் பிணியாளரின் வருத்தத்தையும், வேலைப்பழித்த விழியுடைய விலைமகளிர் சாலவும் நாகரீகமாய் நகைகளணிந்து கோதிமுடிந்த கூந்தலில் நறுமணம் வீசும் நவமல்லிகை சூடி கையில்பிடித்த வெண்குட்டையில் கணக்கற்ற வாஸனைகளைத் தெளித்து அதனால் காதவழிக் கப்புறம் வரும் 'காளையர்' மனங்களை கவரும் திறுஸைகளையும், களங்கமற்ற மனமுடைய கண்ணியவான்கள் தங்கள் அன்பிற்கிசைந்த அருமை நேசர்களுடன் தேசாபிவிர்த்திக்குரிய விஷயங்களைப்பற்றி திறமையுடன் ஸம்பாஷிப்பதையும் பார்த்த முரளீதரன் அப்போதைக்கப்போது தன்மனதில் உதிப்பவற்றை நேசனுடன் கூறிக்கொண்டே வந்தான். முடிவில் ராஜாவின் வாழ்த்துப்பாடல் உரைத்து வாத்தியங்களை யெடுத்துப்போகவே, நின்றிருந்த வண்டிகளெல்லாம் ஒன்றொன்றாய்ப் புறப்பட்டுப் போக ஆரம்பித்தன. இவர்களிருவரும் எழுந்துமெதுவாய்த் தங்களிருப்பிடம் நோக்கிப் புறப்பட்டார்கள்.

முர:—தோழா, என்னுடனின்று வரமாட்டேனென்றாயே! நாமிப்போ பார்த்தவைகளிலிருந்து எவ்வளவு ஸமாசார மறிந்துகொண்டோம், தெரிகிறதா? அச்சிறிய குழந்தைகள் குதித்து விளையாடுவதைப் பார்த்தால் நாம் தெரியாத் தனமாய் பெரியவர்களாய் விட்டோமே, என்றும் குழந்தையாயிருக்க ஈசன் அருள் புரிந்தாரில்லையே என்று துக்கம் உண்டாகிறது. மற்றப்படி நாம் கண்ட அநேக காட்சிகளில் நிர்விசாரமான குதூஹலத்துடன் கூடிய அக்குழந்தைகள் நிலைமைக்கு நிகர் வேறொன்றுமில்லை

என்று என்மனதில் பட்டது. மேம்பட்ட நாகரீகமுள்ள ஆங்கிலமாதர்கள் தங்களுடையவோ மற்றவர்களுடையவோ நாயகர்களுடன் நாணமின்றி வார்த்தையாடுந் தன்மையை நோக்குங்கால் அவர்களுக்குள்ள ஸ்வதந்திரத்தின் அளவை ஒருவாறு அறியக் கூடியதாக விருக்கிறது. அடுத்தபடி ஆருயிர்க் காதலனை காணாத கஷ்டத்தாலோ ஆத்தில் ஆருமில்லாததினாலோ, நேரங்கழித்து வீடு சென்றால் ஆருங் கோபிப்பார்களென்னும் பீதியினாலோ, இல்லை, இயற்கையாயுள்ள ஜாதி குணத்தாலோ, அதுவுமில்லையென்றால் சுத்தபாசாங்குதானோ, மற்றெதினாலோ, கூச்சப்பட்டு பேச்சு மூச்சின்றி இருக்குமிடந் தெரியாமல் இருந்தாலும் உலகோத்தாரணம் செய்யும் உத்தமிகள் ஒரு புற மிருக்க, உலகம் கவிழ்க்கும் உன்மத்தம் பிடித்த ஒண்டொடிகளும் உண்டென்பதை ஒரு நொடியிலறிய இடமுண்டாகிறது. என்ன நடேசா, நான் சொல்லுவது ஸரியோ? தப்போ? அங்கே நாம் உட்கார்ந்திருந்தபோது மிகவும் ஜாஸ்தியாக ஸெண்ட் வாஸனை வீசிற்றே அப்போ நீ என்ன செய்தாய் ஞாபக மிருக்கிறதா? [என்று நகைக்க,]

நட:—நினைவில்லாமலென்ன, அதற்குள் அறிவழிந்து போய் விடுமா? அவளாரப்பா, தன்னை அப்ஸரஸ் என்று எண்ணிக் கொண்டாள் போலும்! சிறிதும் வேண்டாமா? ஏற்கனவே இவ்விஷயங்களில் நான் பயந்து நடுங்கிக் கிடக்கிறேன். என் பக்கத்தில் வந்து நின்று விட்டாள்! மஹாராஜி! பிறகு அங்கிருக்க என்

முர:— பேஷ், வெகுதைரியசாலி, ரொம்ப கெட்டிக்காரன்! கிட்ட வந்து நின்றால், உனக்கென்ன? கூட்டமாய் ஜனங்கள் நிறைந்திருந்தால் ஸ்திரீ புருஷாள் நெருங்கி நிற்பது ஸஹஜம்தானே!

நட:—உனக்கு, அதில் தப்போடா இல்லாவிடில் நீ கிட்ட நிற்கிறது தானே? என்னுடன்கூட திரும்பிப் பார்க்காமல் ஏன் வந்தாய்?

முர:—பிசகில்லை என்றால் கிட்டப்போய் நிற்கிறதென்று அர்த்தமா? உன்னுடைய எண்ணங்களும் அதற்கு நீ ஏற்படுத்தும் பொருள்களும் அதி விநோதமாக இருக்கிறதே! இன்று இத்துடன் போதும்! இதோ நமது இருப்பிடம் வந்து விட்டோம். சாப்பாட்டிற்குமேல் நித்திரைவாராவிடில் குறையும் பேசலாம்.

[என, இருவரும் அவர்கள் வாஸஸ்தலமாகிய அவ்வீட்டில் நுழைந்தனர்.]

# ஐந்தாவது அத்தியாயம்

## ஜாதகப் பொருத்தம்

" ஆரங்கே? நீலா, எங்கிருக்கிறாய், இங்கேவா " என்று வெங்கடேச்வரய்யர் தமது அருமைப் பெண்ணையழைத்தனர். அன்று ஞாயிற்றுக்கிழமை விடுமுறை நாளாகையால் அவள் ரவிவர்மாவினால் வரையப்பெற்ற அழகிய லக்ஷ்மி படத்திற்கு பட்டு ஜரிகை, பலவகை ஜிகினு முதலியவற்றால் அலங்கரித்துக் கொண்டிருந்தாள். அன்பு மிகுந்த தந்தை கூப்பிடும் சத்தம் காதில் வீழ்ந்தவுடன் அதிதுரிதமாய் அதைக் கீழேவைத்து "இதோ வந்து விட்டேன்" என்றோடி, "ஏன் அண்ணு கூப்பிட்டீர்க" ளென, அவர் அவளது மெல்லிய கரத்தைப் பற்றிக் கண்களிலொற்றிக் கொண்டு, "இம்மலர் கரத்தைப் பிடிக்க எவன் வரப்போகிறானே! நமது குழந்தையின் அருமை தெரிந்துவைத்துக் கொள்ளுகிறவனுக இருக்கவேண்டுமே!" என்றெண்ணிப் பெருமூச்சுடன் அவளை நோக்கி "கண்ணே! உன் அம்மா எங்கே? கொஞ்சம் கூப்பிடு" என்றார், அவளும் சமையலறையில் பக்கத்தகத்து பார்வதியுடன் வார்த்தையாடிக் கொண்டிருந்த சிவகாமி அம்மாளிடம் வந்து "அம்மா! உன்னை அண்ணு கூப்பிடுகின்றார், வா" வென்றழைக்க, அவ்வம்மணியும் மிகப் பரப்பரப்புடன் பார்வதி அம்மாளுக்கு விடைகொடுத் தனுப்பிவிட்டு, ஐயரவர்கள் பக்கலணுகி அழைத்த காரியம் யாதென்று வினவ, அவர் சிறிது நகை முகத்துடன் அவளை நோக்கி கேலியாக, " ஏது, வெகு நாழியாக தங்கள் பேட்டிக்குக் காத்திருந்தும் கிடைக்க வில்லையே! கூப்பிட்டாலொழிய வருகிறதில்லை யென்று ஏற்பாடாக்கும். கிடக்கிறது பெரிய மனஸுபண்ணி இப்பவாகிலும் வந்தீர்களே!. இப்படி தயவு செய்யுங்கள்" என்று உரைத்தனர். சிவகாமி அம்மாளும் சிரித்துக்கொண்டு அவரமர்ந்திருக்கும் நாற்காலியருகில் தரையில் உட்கார்ந்தனள். பிறகு தன்னையழைத்த ஸமாசார மென்னவென்று கேட்க, அவர் அன்றையதினம் தபாலில் திருச்சியிலிருந்து முன் தாங்கள் உத்தேசித்த பிரபு குமாரனின் ஜாதகம் வந்திருப்பதாவும் அதை இராகு காலத்திற்குள் ஜோஸ்யரிடம் காட்ட வேண்டியிருப்பதாலும், "உடனே நமது ராமனுத ஜோஸ்யரை அழைத்துவரச்சொல்லவேண்டும். சிவராமனிருந்தால் போய் அவரை

கையோடு அழைத்துவரச்செய் " என்றார். இவர்களிப்படி உரை யாடிக் கொண்டிருக்கும் போதே இரண்டாம் வேளைக்கான பல ஹாரம் காப்பியுடன் மேற்கூறிய பரிசாரகன் அங்கு தோன்றினன். அம்மாளுக்கு ச்ரமமில்லாமலே அவர் அவனைப் போய் ஜோஸ்யரை அழைத்துவர உத்தரவிட்டார். கையிலிருப்பதை எஜமானர் முன்பு வைத்து அவரது கட்டளையை நிறைவேற்றச் சென்றான் சிவராமன். ஐயர் பலஹாரம் செய்து சிறிது ச்ரம பரிஹாரஞ் செய்து கொள் வதற்குள், ஜோஸ்யர் ஸஹிதம் பரிசாரகன் வந்து சேர்ந்தான்.

வெங்:—வரவேணும், ஜோஸ்யர்வாள். இப்படி உட்காருங்கள் [என்று பக்கத்திலிருந்த நாற்காலியைக் காண்பித்தார்.]

ஜோஸ்:—என்ன இவ்வளவு அவஸரமாக அழைத்தது! சிவராமனைக் கேட்டேன். அவன் தனக்கொன்றும் தெரியாதென்று சொன் ஞன். முக்கியமான சில விஷயங்களைக் கவனித்துக் கொண்டி ருந்த நான், அவைகளை அப்படியே விட்டு விட்டு என்னமோ வ்தோ வென்று ஓடி வந்தேன். அழைத்த ஸமாசாரம் என்ன?

வெங்:—நமது குழந்தை நீலலோசனிக்காக திருசிரபுரம் ஜட்ஜி சங்கர நாராயணய்யருடைய குமாரன் ஜாதகம் வந்திருக்கிறது. இன்று லீவ் நாளாக இருப்பதால் இரண்டு ஜாதகங்களுக்கும் பொருத் தம் எவ்விதமிருக்கிறதென்பதைப் பார்த்துத் தெரிந்துகொண் டால் கூடிய சீக்கிரத்தில் அவர்களுக்கு ஜவாப் எழுதுவதற்கு ஸௌகர்யமாக விருக்கும். ஆகையால் இராகுகாலம் வருவ தற்குள் அவைகளை ஆராய்ந்து பார்க்கும் நிமித்தம் அவஸர மாக அழைக்கச் சொன்னேன்.

ஜோஸ்யர் (மந்தஹாஸத்துடன்) " அப்படியா ! எங்கே ஜாத கங்கள் ?" என்றுரைக்க ஐயரவாள் சென்று அதை யெடுத்து வருவ தற்குள், இடுப்பிலிருந்த டப்பியினின்றும் ஒரு சிமிட்டா பொடியெ டுத்து சொர் என்று உறிஞ்சிவிட்டு, லேஞ்சியினால் முகத்தைத் துடைத்துக்கொண்டு அவர் வரும் ஜாடையறிந்து கம்மியிருக்கும் குரலைக் கனைத்து சரிப்படுத்திக்கொண்டு " எங்கே ? இப்படித்தா ருங்கள் " என்று அதைக் கையில் வாங்கிக் கொண்டார். பிறகு அரைமணி ஸாவகாசம் கவனமாக இரண்டு ஜாதகங்களையும் ஆராய்ச் சிசெய்து, பிள்ளையாண்டானுடையது மிகவும் யோக ஜாதகமாக இருப்பதால் தன்மனதிற்கு நிரம்பவும் ஸந்தோஷமாய்ப் பிடித்திருப்ப

தாகவும், பெண்ணின் ஜாதகத்திற்கு மிகவும் பொருத்தமாக இருப்பதாகவும் (பகவானுடைய கிருபையும் ஒத்திருந்தால்) பிள்ளை வீட்டார்க்குக் கடிதம் எழுதி அவர்கள் அபிப்ராயம் தெரிந்துகொண்டு விவாஹ விஷயமாய் மேல்நடத்த வேண்டியதைத் தடையின்றி செய்யலா மென்றும் சொன்னார். ஐயர் ஸந்தோஷ மிகுதியினால் "ஆரடி அங்கே! ஜோஸ்யருக்குத் தாம்பூலம் கொண்டுவா" என்றார். புருஷரின் கருத்தறிந்த அப்பூங்கொடியும் ஒரு வெள்ளித்தட்டில் நிறைய வெற்றிலைப் பாக்கு வைத்து அதன் மீது ஒரு ஸவரனையும் வைத்து தனதன்பனருகில் கையிலேந்தினவளாய் நிற்க, அவரதை வாங்கி ராமனாத ஜோஸ்யரை நோக்கி, "நான் தங்களுக்குக் கொடுப்பது, தாங்களெனக்கு அளித்த அவ்வளவு ஆநந்தத்தை யளிக்கா தென்றாலும், பூரித்த மனதுடன் கலியாணப் பேச்சு ஆரம்பிக்கும் பொழுது கொடுப்பதை ஸந்தோஷமாய் அங்கீகரிக்கவேணும்" என்று தட்டை யவரிடம் நீட்டினர். அவரும் "நன்னாருக்கு. அதற்கென்ன" என்று வாங்கிப் பொற்காசைக் கண்டவுடன் பூரிப்பெய்தினவராய் அதை எடுத்துப் பத்துமுடி போட்டு இடுப்பிற் சொருகிக்கொண்டு "நான் வரலாமா? அவசியமானபொழுது சொல்லியனுப்பினால் வந்து சேருகிறேன்" என்று உத்தரவு பெற்றுச் சிறிது கர்வத்துடன் நடந்து போனார்.

சிவகாமி அம்மாள் சிரித்த முகத்துடன் புருஷனை நோக்கி, "என்ன! ஜோஸ்யரும் உங்களிஷ்டம் போலவே சொன்னாப்பலே இருக்கே, அப்புறம் என்ன செய்கிறதாக உத்தேசம்? பிள்ளையாண்டான் என்னமோ, குழந்தையைப் பார்த்த பிறகுதான், தாங்கள் மேல் யோசனை செய்யப்போகிறதாக அவாள் எழுதியிருக்கிறாப் போலிருக்கிறதே; அதற்கு பதில் என்ன எழுதப்போகிறீர்கள்? அவாளிங்கே வந்து பார்க்கப்போகிறார்களா? இல்லை, நீங்கள் என் பெண்ணைப்பாரு மென்று கொண்டுபோய் காட்டப்போகிறீர்களா? மனதிலிருப்பதைச் சொன்னால், பிறகு யோசித்து ஒரு காரியம் செய்யலாம். எப்படியும் அவாளுக்கு நாளைக்கு கடுதாசி போடவேணுமே!" என்றாள்.

வேங்:—எனக்குந்தா னின்னது செய்வதென்று புரியவில்லை. நாம் பெண்ணைப் பெற்றவர்களாகையால் அவர்களிஷ்டத்தை ஒத்துப் போகவேண்டியதேயானாலும் நம் கண்மணியை அங்கழைத்துப்போய்க் காண்பிப்பது என்றால், ஏதோ சிறிது மனக்

கவலை யுறுகிறது; இருக்கட்டும். இப்பொழுது ஜாதகப் பொருத்தத்தைக் குறித்து எழுதுகிறேன். பிறகு, அவர்கள் அபிப்ராயத்தை அறிவித்த பின் மற்றதைப் பார்த்துக்கொள் வோம்" என்றார்.

சிவகாமி அம்மாள் சிறிது ஸமாதானமடைந்து, "காலத்துக் கேற்றாப்போல எல்லாம் புதிசு புதிசாய் ஏற்படுகிறது, நல்ல விசித் திரம்" என்று சொல்லிக்கொண்டு வெள்ளித்தட்டைக் கையிலெ டுத்து உட்சென்றாள். ஐயரவர்கள் வண்டிபோட உத்தரவு செய்து உடுத்திக்கொண்டு பேடாப் போவதற்குப் புறப்பட்டார்.

# ஆறுவது அத்தியாயம்

## கல்யாண ஆடம்பரம் : மருமகன் வருகை

நாகையில், நீலாயதாக்ஷி அம்மன் கோவிலுக்கு எதிரில் இருக்கும் வீதியில் ஒருபெரிய மெத்தை வீட்டின் முன்பக்கத்தில் மிகவும் உன்னதமும், விஸ்தாரமுமுள்ள அழகிய கொட்டகை போட்டு அதைச்சுற்றி அலங்காரமாக பளபளப்புள்ள ஜரிகையுடன் கூடிய ஜாலர் நாற்புறமும் கட்டி, கொட்டகையின் இருபுறத்திலும் உள்ள வாசற்படிக் கிருமருங்கிலும் பெரிய தாருடன் கூடிய வாழைகளும், தென்னை, பனை, ஈந்து, கமுகு இவைகளின் காய்களை குலே குலேயாயும் கட்டி, அதைச் சுற்றிலும் வர்ணிக்கத்தரமில்லாத அழகிற்சிறந்த பலவகை பிரதிமைகளையும் அமைத்து, அநேக பிரகாச விளக்குகள் ஜ்வலிக்க, இதை வெளியில் பார்த்துக்களித்தவர்கள் உட்பக்கத்தைப் பார்க்க ஆவலுள்ளவராய் மெள்ள அருகிற் சென்று நோக்கினேலோ, அதன் நடுவில் அலங்கரித்திருக்கும் ஊஞ்சலில்தான் முதலில் பார்வை விழும்படி அத்தனை ஶ்ருங்காரமாய் ஜோடித்திருந்தது. அதிற் பொருத்தியிருக்கும் அழகிய கந்தர்வ பொம்மைகளையும், தம்பதிகளமரும் உயரத்திற்கு சற்று மேற்புறத்தில் பந்தல்போல அமைத்து அதிற்கட்டியிருக்கும் பருத்த முத்து ஸரங்களின் வெண்மையையும் அதற்கிடையிடையே, ஜிலுஜிலுவென்று ஒளிவீசும் ஜரிகைக் கம்பிகளையும் இணைத்து, மிகவும் மனோரஞ்சிதமாய் அலங்கரித்திருந்த ஊஞ்சலினின்றும் கண்ணை பிரயாஸையுடன் திருப்பி நிமிர்ந்து பார்த்தால், "அடா என்ன! என்ன அழகு! என்ன நேர்த்தி! எவ்வளவு கிளைகள்! எத்தனை தினுசு நிறம்! அடேப்பா, இவ்வளவு பெரிய விளக்கு நான் எங்கும் பார்த்ததில்லே!" யென்று ஸாதாரண ஜனங்கள் ஆச்சர்யத்துடன் சொல்லிக் கொள்ளும்படி பார்ப்பவர் கண்களையும் மனதையும் ஒருங்கே கவரும் லஸ்தர், க்ளோப், ரஸகுண்டு வகைராக்களும் சற்று கண்ணைத் தாழ்த்தினால் ஒழுங்காய்ச் சுற்றிலும் கட்டியுள்ள அழகோடுகூடிய விநோத விசித்ரங்களமைந்த படங்களையும், தரையிற் பரப்பியிருக்கும் பல பூ வேலேகள் செய்த ரத்ன கம்பளங்களின் சிறப்பையும், சலிப்பின்றி ஒன்றைவிட்டொன்றை கண்கள் மாற்றி மாற்றிப் பார்த்துக்கொண்டிருக்க, மனமோ தஞ்சாவூர் கிருஷ்ணனும், ராமனுதபுரம் ரத்னமும்

ஒருவர்க்கொருவர் போட்டியின் மீது பல்லவி வாசிக்கும் நாகஸ்வரத்தி லீடுபட்டுப்போக, வேடிக்கை பார்க்கப் போனவர்கள் எவ்வளவு சீக்கிரம் திரும்புவார்களென்பதைப் படிப்பவர்களே நிதானித்தறிய வேணும். அன்று புதன்கிழமை, அம்மாளிகையிலுள்ளார் எல்லோரும், அவஸர அவஸரமாய் சிங்காரித்துக்கொண்டு, ஸாயங்கால வேளையை எதிர்பார்த்திருந்தனர். மணி ஆறு அடித்தவுடன், அநேகம் வண்டிகள் ஒழுங்காய் மேற்கூறிய கல்யாண வீட்டினெதிரில் நிற்க, குலுங்கப் பணிபூண்ட குலமகளிர் பலர், அவ்வாஹனங்களில் அமர்ந்தனர். ஆடவர்கள் இந்நாளைய நாகரிகத்திற்கிணங்க அவர்களை சிரமப்படுத்தாமலிருப்பதே தங்களுக்கு மேன்மை என்று நினைந்தவர்களைப்போல் காலில் விதவிதமான ஜோடு செருப்புகளை யணிந்து, ஒய்யாரமாய் மூலகச்சம் தரித்து, மேல் மெல்லிய ஜரிகை வேஷ்டியைப் போர்த்து, ஒருவர்க்கொருவர் வேடிக்கையாய்ப்பேசிக் கொண்டு, சிரித்த முகத்துடன் ரயில்வே ஸ்டேஷனை நோக்கிச் சென்றார்கள். அங்கு முன்னதாகவே ஏற்பாடு செய்திருந்தபடி, பத்து பிரகாச விளக்குகளும், இரட்டை மேளங்களும், தஞ்சாவூர் பாண்ட் (Band) ஸெட்டும் வந்து தயாராய் காத்துக்கொண்டிருந்தன. விஸ்தாரமான இடமுள்ள வெய்டிங் ரூமில் (Waiting room) கீழே பிரப்பம்பாய் விரித்து சந்தன தாம்பூலங்கள் வைக்கப்பட்டிருந்தன.

மணி ஏழரையானவுடன் ஆரவாரத்துடன் புகை வண்டித் தொடர், ஸ்டேஷனில் வந்து நின்றது. அதிலிருந்து அநேகம் பேர்களுடன் ஸம்பந்தி சங்கரநாராயண ஐயரவர்கள் இறங்கினார்கள். வந்தவர்களை வெங்கடேசுவரய்யர் மிகவும் மரியாதையாக வரவேற்றனர். அலமேலு அம்மாள் முதலியவர்களை சிவகாமி அம்மாளும் அவள் நாத்தனாருமாக அழைத்துப்போய் உட்காரவைத்து, அது வரையில் வண்டியில் வந்த சிரமந்திர, பரிசாரகர்களால் முன்னமே ஸித்தம் செய்யப்பட்டிருந்த காபி, டீ முதலிய பானவகைகளை அவரவர் விருப்பப்படி யளித்து, களையாற்றி, சர்க்கரை, கற்கண்டு வழங்கி, சந்தன புஷ்ப தாம்பூலங்களால் உபசரித்தனர். மாப்பிள்ளைக்கு அவரிஷ்டம் போல் விலையுயர்ந்ததாய் மோஸஸ் ஷாப்பில் தைத்து வரவழைத்த ஸூட்டைத் தரித்து காலில் அழகிய பூட்ஸைப்போட்டு, தலையில் இளம் ''ராஜா வர்ணத்தில் ஜரிகைக்கட்டடம்போட்ட தலைக்குட்டை வைத்து, குழந்தை நீலலோசனி கையினுல் செய்த அபூர்வவேலைப்பாடமைந்த பெல்ட்டையும் இடுப்பிற்போட்டு, மாப்பிள்ளையினழகைப் பார்த்து பூரித்தவராய் ஐயர் சங்கரநாராயண ஐயரைப்பார்த்து, ''ஏன்

தாமதம்? புறப்படலாமே" என, "ஆகா! என்ன தடை?" என்றார். உடனே முரளீதரனை நாலு குதிரைகள் பூட்டிய வண்டியிலேற்றி உட்காரவைத்தனர். மேற்படி வண்டி நடுவில் வர, முன்னாடி புருஷர்கள் குதூஹலமாய் ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டும் கர்ணாமிருதமாய் வாசிக்கும் நாகஸ்வரத்தி லீடுபட்டும் தம்மை மறந்து மெதுவாய் நடந்துபோயினர். அதற்குப் பின்புறத்தில் பெண்டுகளெல்லாரும் ஒருவர்க்கொருவர் கல்யாணப் பெண்பிள்ளைகளுக்கு "இவாளென்ன உறவு? அவாள் என்ன உறவு" என்று கேட்டுத் தெரிந்துகொள்ளுகிறவர்களும், ஒருத்தி சற்று நல்ல புடவை கட்டிக்கொண்டிருந்தால் "அதை எங்கே வாங்கினீர்கள்? என்ன விலை? சாயம் எப்படி; கெட்டிதானா? நீங்க தோச்சு பாத்தேளா? இன்னம் தோய்க்கத் தோய்க்க நன்னாயிருக்குமா?" வென்று விசாரிப்பவர்களும், நகைகளைப்பற்றி நாகரீகம் பேசுபவர்களும், இந்திரலோகத்திலிருந்து இப்போதான் வந்திறங்கி வந்ததைப்போல நினைந்து எழிலில் தனக்கிணை யொருவருமில்லை யென்றெண்ணி அன்ன நடை போடுகிறவர்களுமாக இரவு ஒன்பதுமணிஸுமாருக்கு குமரகோவில் தெருவில் அமர்த்திவைத்திருந்த ஸம்பந்திகள் ஜாகைக்கு வந்து சேர்ந்தனர். ஹாரத்தி யெடுத்து தேங்காய் சுற்றி உடைத்து திருஷ்டிகழித்து மாப்பிள்ளையை உள்ளழைத்துச் சென்றனர். உடனே வெங்கடேசுவரய்யர் இருபது பவுன் எடையுள்ள தங்கத் தாம்பாளம் ஒன்றில் லக்னபத்திரிகையை வைத்து ஸம்பிரதாயப்படி சங்கரநாராயண ஐயரிடம் கொடுக்க, வீட்டிற்கு வழக்கமாயுள்ள சாஸ்திரிகளால் அது ஸபையில் படிக்கப்பட்டது. பிறகு பிள்ளையின் தந்தை எல்லாருக்கும் தாம்பூலமளித்து விடைகொடுத்தனர். உடனே நிச்சயதாம்பூலம் செய்யவேண்டி அவஸரமாக முரளீதரனைத் தவிர மற்றெல்லாரும் மேளதாளத்துடன் பெண் வீட்டிற்கு வந்துசேர்ந்தனர். வைதிகாளுத்தரவுப்படி நீலலோசனியை மடியில் வைத்துக்கொண்டு அவள் தந்தை அமர, சங்கரநாராயணய்யர் மேற்படியார்களுரைக்கும் மந்திரங்களை வாயினால் கூறிக்கொண்டே, ஊதா மேக வர்ணத்தில் ஜரிகை கொட்டடி போட்ட கொள்ளைகாலம் சேலை யொன்றை ரவிக்கை உள்பட தட்டில் வைத்து பெண்ணின் கரத்திலளித்தனர். நிச்சயதாம்பூலமானபிறகு ஸம்பந்திகள் விடைபெற்று, ஜாகைநோக்கிப் புறப்பட்டனர். சிவகாமி அம்மாள், அவர்களை நோக்கி, "இதோ உங்கள் பின்னாலேயே அன்னம் எடுத்தனுப்புகிறேன். மாப்பிள்ளை இன்று அப்படித்தான் சாப்பிடுகிறது ஸம்பிர

தாயம் போலிருக்கிறது,'' என்றாள். அவர்களும் மத்தியானப் பிர யாணத்தால் களைத்துப்படுக்கையில் நோக்கமுள்ளவர்களாய்ப்போய்ச் சேர்ந்தனர்.

இந்த ஏற்பாடுகளும் ஆடம்பரங்களும் ஒருபுறமிருக்க, குழந்தை நீலலோசனி என்ன ரீதியிலிருக்கிறாள் என்பதைப்பற்றிச் சிறிதும் விசாரியாமலிருக்கலாமா? எல்லாரும் அவளை மாத்திரம் வீட்டில் விட்டுவிட்டு எதிர்கொண்டழைக்க ஸ்டேஷனுக்குச் சென்றனர். நீலாம்பாளுக்கு, நடக்கும் வைபவங்களைக் கண்ணுற்று, மிகவும் ஸந் தோஷம் உண்டாயிருந்தபோதிலும், உற்றுநோக்கில், மனதிலேதோ விஷயங்கள் போராடுவதாய்த் தோன்றக்கூடியதாக யிருந்தது. அதின்காரண மெதுவாயிருக்கலாம்? இவ்வளவு நாள் இளங்கன்றைப் போலத் துள்ளித்திரிந்த தனக்கு நாளைமுதல் ஒரு கட்டுப்பாட்டிற்கு உள்படவேண்டி யிருக்குமே யென்பதினாலோ, தானடையப்போகும் புருஷனின் ரூபஸௌந்தர்யத்தைத் தான் பார்த்து ஸம்மதித்தபிறகு விவாஹம் செய்யும்படி ஏற்பாடாகவில்லை யென்னும் குறைவினாலோ, தனக்குக் கணவனாய் வருபவனின் கட்டழகைப் பலரும் கூறக்கேட்டு அச்சுந்தரனைத் தான் மாத்திரம் பார்க்கவில்லையே யென்னும் ஏக்கத் தினாலோ, தன் காதலனாகப்போகும் கண்மணியை, தாயற்ற சே யென்று கூறக்கேட்டுள்ளா ளாகையால் மாற்றாந்தாய் என்னும் மாமியாரின் மனதிற்கிணங்க மானிலம் புகழ நடக்கவேணுமே என் னும் கவலையினாலோ, அவள் முன்ஹாலில் ஒரு ஸோபாவில் சித்திரப் பிரதிமைபோ லமர்ந்து, ஆலோசித்துக்கொண் டிருந்தவள் மேற் கூறிய ஸமாசாரங்கள் நடந்தபிறகு ஆகாரம்செய்து தாயுடன் படுக்கச்சென்றாள்.

# ஏழாவது அத்தியாயம்

## விவாஹ மஹோத்ஸவம்

வியாழக்கிழமை விடியற்காலம் பஞ்சகண்டவேளை ஆரம்பமுன்னதாகவே மாப்பிள்ளைக்கு மங்களஸ்னானம் செய்வித்து, வைதீகர்கள் சூழவிருக்க வ்ரதத்தையும் செய்து முடித்தனர். பிறகு, அலமேலு அம்மாள் பிள்ளையை யழைத்து முகத்தைத் துடைத்து பத்மதளத்தையொத்த அவனது கண்களில் மையையும், பளீரென்று ஒளிவீசும் நெற்றியில் பொட்டையும் இட்டனள். பரதேசகோலம் போவதற்கு நாழிகை ஆயிற்றென்று மிகவும் அவஸரப்படுத்த, முரளீதரன் பத்தமுழ வேஷ்டியை பஞ்சகச்சம் வைத்து கட்டிக்கொள்ளத் தெரியாமல் "பசபச" வென்று விழிப்பதைக் கண்ட மங்களவல்லியின் கணவன் ஸ்வாமிநாதய்ய ரென்பவர் நகைத்துக்கொண்டு, அவனுக்கு அதை ஸரிவர உடுத்தினர். பிறகு கையில் சுவடியும் ஒரு சிறிய மூட்டையும் பிரம்புடன் குடையும் கொடுத்தனர். காலில் ஜோட்டைத் தரித்து, கையிற் பிடித்த குடையுடன் மங்களவாத்ய மொலிக்க பலரால் சூழப்பட்டு, கழுத்தில் புரளும் முத்துமாலையுடன் முரளீதரன் மெதுவாய் அசைந்து நடந்துவருவதைப் பார்த்தால், மாரனே உருவம்பெற்று வந்தனனோவென பார்ப்போர் நினைக்கும்படி அவ்வளவு அழகுடன் காணப்பட்டான்.

வெங்கடேசுவரய்யர் மாப்பிள்ளையின் ஸௌந்தர்யத்தைப் பார்த்து ஸந்தோஷித்தவராய், ஸம்பிரதாயப்படி அவனை காசியாத்திரை போவதைத் தடுத்து பெண்ணைக் கொடுப்பதாக ஸமாதானம் செய்து அழைத்துக்கொண்டு கல்யாணப்பந்தலில் வரவும், அங்கு முன்னமே ஸர்வாபரணபூஷிதையாக நிற்கும் பொற்கொடியாகிய நீலலோசனியின் பத்மலோசனங்கள் முரளீதரன் கண்களை ஸந்தித்தன. முகூர்த்தகாலம் நெருங்கிவிட்டதென்று வைதீகர்கள் அவஸரப்படுத்த, மாலைமாற்றி, கன்னியூஞ்சலாடி ஸுமங்கலிகளாற் திருஷ்டிகழித்து உள் அழைத்துச் செல்லப்பட்டார்கள். குறித்த காலத்திற்குள் குழந்தைக்குக் கூறையுடுத்தி வெங்கடேசுவர ஐயர் மந்திர பூர்வமாய்த் தாரைவார்த்துக்கொடுக்க அக்னிஸாக்ஷியாய் நல்ல சுப முகூர்த்தத்தில் பெரியோர்களால் ஹஸ்தமிட்டனுக்கிரஹம் செய்யப்பட்ட மாங்கல்யத்தை முரளீதரன் மட்டற்ற மகிழ்ச்சியுடன் மலர்க்கண்ணளாகிய நீலாம்பிகையின் கழுத்தில் தரித்தனன். அங்கு வந்தி

ருந்த ஸர்வத்ராளும் தம்பதிகளுடைய ஜதைப் பொருத்தத்தைப் பார்த்து அகமகிழ்ந்தனர். இதில் வாஸ்தவமான ஸந்தோஷம் நடராஜனுக்கே. விவேகசாலியான நீலலோசனியைத் தன் நண்பன் மணந்ததினால், இனிமேல் அவனுக்கு ஒருவிதமான குறைவுமில்லையென்றும், அவனது மகிழ்ச்சிக்குரிய ஸ்ரீதேவி போன்ற அவளது நல்லதிர்ஷ்டத்தினால் தனதன்பன் படிப்படியாய் உயர்பதவி பெற்று மஹோன்னத ஸ்திதியிலிருப்பா னென்றும் எண்ணி மகிழ்ந்தனன். வெங்கடேசுவரய்யர் வெகுகாலமாயங்கு வஸிப்பதினால் அவ்விடத்திலுள்ள அநேகம் பெரிய மனிதர்கள் மிகவும் விகிதமாகையால், முகூர்த்தத்தன்று அவருடைய அவ்வளவு பெரிய முன் ஹாலும் வெளியில் போட்டிருந்த கொட்டகையும் நிறைந்து ஜனங்கள் போகவர இடமின்றி அத்தனை நெருக்கமாக இருந்தது. அவ்விதமே உட்கட்டும் மெத்தையும் ஸ்திரீகள் மயமாய் நிறைந்திருந்தது. சிவகாமி அம்மாள் பெரிய மனிதன் ஸம்ஸாரமும், பெரிய வம்சத்தினுதித்தவளு மாகையால், புதுப்பணங் கண்டோர் சிலர் தலைகீழாய் நிற்பதைப்போல, ஸாமான்ய அந்தஸ்துள்ளவர்களைக் கண்டால் அவமதிப்பதே யில்லை. ஆகையால் அந்த அம்மணியின் அனுஸரணையை முன்னிட்டு அநேகம் ஸ்திரீ ஜனங்கள் வந்திருந்தனர். ஆயிரம் புருஷர்கள் ஒன்றுசேர்ந்து காலம் போவதற்கு கலகமில்லாத வார்த்தைகளைப் பேசுவார்கள். அம்மாதிரி, நம் தேசத்துப் பெண்களிருந்துவிடில் அவர்களுக்கு வயிறு உப்பி மூச்சடைத்துப் போய்விடும். இங்கே தாலி தரிப்பதற்குள், அவர்கள் வரதக்ஷிணை என்ன கொடுத்தார்களென்பதைப் பற்றியும், பெண்ணுக்கு என்ன நகை போட்டார்கள், பிள்ளைக்கு இவர்கள் ஏதாகிலும் நகை போட்டார்களோ வென்றும், மற்றும் அங்கு வந்திருப்பவர்களின் நகை, புடவை, ரவிக்கை, பேச்சு, நடை இவைகளைக் குறித்துப் பரிஹஸித்தும், தாலி கட்டி முடிந்தும் இங்கு பேசி முடிந்தபாடில்லை. பிறகு எல்லாருக்கும் முகூர்த்த தாம்பூலம் அளித்து, பஞ்சபக்ஷ்ய பரமான்னத்துடன் திவ்ய போஜனமும் உபசாரத்துடன் அளித்து, பரிமளங் கமழும் சந்தனமும், மனோஹரமான வாஸனையமைந்த ஜாதி புஷ்பமும், இளந்தளிர் வெற்றிலையுடன் தினுஸு தினுஸான சீவல்களையும் அவரவரிஷ்டம்போல யதேஷ்டமாய் எடுத்து வழங்கினர்கள். ஸாயந்திரம் ஆறு மணிக்கெல்லாம் காஞ்சீபுரம் தனகோடி கச்சேரி ஆரம்பித்து, எட்டரை மணி வரையில் மிகவும் இன்பமாக நடந்தது. வந்திருந்தவர்கள் மனம், ஆனந்த

வெள்ளத்தில் அமிழ்ந்தது. ஸபாமத்தியில் அலங்கரித்து உட்கார வைத்திருக்கும் வதூவரர்களைப் பார்த்து நேத்ரானந்தமடைந்தவர்களுக்கு, கூட இதுவும் சேரவே யாவரும் தம்மை மறந்து தலையை அசக்குவோரும் தாளம்போடுவோரும் "ஸபாஷ்" என்போரும், "பேஷ், அச்சா" என்போரும், தாளம் ஸ்வாரஸ்யமாய் விழும் இடங்களில் "ஆ, அப்படி" என்று இவர்கள் தான் கிட்டயிருந்து கற்றுக் கொடுத்தவர்களைப் போலவும், பலதினுஸாய் ஸங்கீதத்தின் ஸாரத்தை அனுபவித்தனர். பிறகு ஔபாஸனமாகி அருந்ததி பார்த்து, குழந்தைகளுக்கு ஆகாரம் செய்வித்து, அன்று அவ்வித ஸம்பிரமத்துடன் பொழுது போயிற்று. சுக்கிரவாரம் விடிந்தது; சிவகாமி அம்மாள், ஸம்பந்திகள் ஜாகைக்கு, பற்பொடி, சீப்பு, கண்ணாடி, மைபரணி, சாந்துகிண்ணம் வகைகளுடன் பல் தேய்த்ததும் அருந்துவதற்கான பக்ஷணங்களும் காபி வகைராவும் பொங்கல் வற்றல் வடாம் தினுஸுகளும், மேளதாளங்களுடன் மற்ற பெண்டுகளையும் சேர்த்துக்கொண்டு, வழக்கப்படி கொண்டுபோய் வைத்து விட்டு, ஸுமங்கலிகளை யெல்லாம் எண்ணெய் தேய்த்துக்கொள்ளும்படி உபசாரங்கள் கூறிவிட்டு புறப்பட்டு வந்தனள். பரிகாஸப்பாட்டுகளுடனும் பலவித வேடிக்கைப் பேச்சுக்களோடும் பகற் போஜனம் முடிந்தது. சற்று சிரமபரிகாரஞ் செய்துகொண்டு, நீலாம்பாளுக்கு சிங்காரித்து நாகரீகமாய் உடை உடுத்தி, நாழிகை ஆயிற்றென்று நலங்கிற்கு ஏற்பாடுசெய்ய, முரளீதரன் ஸஹோதரி, மன்னி வந்து பாட்டுச் சொல்லி அழைத்தாலொழிய தன் தமையன் வாரானென்று சொல்லினள். மங்களவல்லி, மருமகள் கையைப் பிடித்து மாப்பிள்ளைக்கு ஸமீபத்தில் அழைத்து வந்து, "மாப்பிள்ளை, குழந்தை நலங்கிற்கு அழைக்க வந்திருக்கிறாள்", என்றனள். அவளவ்விதம் உரைத்தவுடன் முரளீதரன் எழுந்திருக்கப் பிரயத்தனப்பட, நடராஜனொருபுறமும் தங்கை யொரு புறமுமாய், அவனைத் தடுத்து, "அப்பா, என்ன ! ஆம்படயாளைக் கண்டவுடன் கூப்பிடாமலே எழுந்து போகப் போகிறாப் போலேயிருக்கு. அதெல்லாம் ஸரிப்படாது. தெரியுமா ! உட்காரு. பாட்டுச் சொல்லியழைத்தால்தான் போகலாம்" என்றனர். முரளீதரன் மெதுவாய் நகைத்துக் கொண்டே அமர, மங்களவல்லி, "நீலா, எங்கே நலங்கிற்கு அழை. சுருக்காய் ஒரு பாட்டுச் சொல்லு" என்றாள். நீலாம்பாளுக்கு ஏதோ குற்றம் செய்தவளைப் போல நெஞ்சும் மாரும் திடுதிடென்று அடித்துக்கொள்ள, தொண்டையிலிருந்து சப்தம் வெளி

வராமலடைத்துக்கொள்ள, கடைக்கண்ணுல் தனதாருயிர்க் காதலனை மெள்ள ஒரு தரம் நோக்க, சாந்தஸ்வரூபியான அவனது புன் சிரிப்புடன் கூடிய முகத்தாமரையானது அவளது பயத்தைச் சற்று நிவர்த்தி செய்தது. பிறகு மனதைத் திடம்செய்துகொண்டு குலுங்க புஷ்பித்த பூங்கொடிபோல் வளைந்து நின்று பின்வரும் பாடலைப் பாடினுள்.

நலங்கிட வாரும் நீ ரென்துரையே !
நாதா, எந்தன் மேற்கிருபை செய்திப்போ. [நலங்.
ஸுந்திரமாரா, ஸொகுஸுள்ள தீரா, நீ
இந்தவேளை எந்தன் சிந்தை மகிழ. [நலங்.
கெந்த புஷ்பங்கள். நான் அந்த மாயளித்து நீ
ஸொந்தமதாய் நாமும் பந்துகளாடி [நலங்.
கஞ்சதளாக்ஷா உம் கழலினை நானும். நீ.
தஞ்சமென்று வந்தேன் அஞ்சலென்றிப்போ. [நலங்.

என்று பாடவும், பாட்டினுல் பரவசமடைந்த முரளீதரன், தன் நேசனுடன் அதை கவனிக்காதவன் போல, இங்கிலீஷில், இப்படிப் பட்ட இந்த புராதன வழக்கங்கள் தன்னிஷ்டத்திற்கு ஒத்ததாக இருக்கவில்லை யென்றும் நாகரீகம் அதிகமாயுள்ள இந்த நாளிலும், இப்படிப்பட்ட பால்ய விவாகம் மட்டுப் பட்ட பாடில்லையென்றும், நாயக, நாயகிகளுக்கு தக்க வயது வந்து விவாஹம் ஏற்படில். அப் பொழுது அவர்களுடைய அபிப்ராயத்தின் நினுஸு வேறுக இருக் கும் என்றும், சொன்னுன். அதற்கு அவன் 'ஸரிதான் பிரஸங்கம் பிறகு செய்யலாம், உன் ஆம்படையாள் கால் வலிக்க வலிக்க நிற் கிறுள், எழுந்திரு பார்க்கலா' மென்றுன். அவன் சிறித்துக் கொண்டே எழுந்து பொற் கொடியாகிய நீலாவின் காத்தைப் பற்றி இருவரும் சிறுமியர் சூழ வாசலிலுள்ள கொட்டகையில் விரித் திருந்த விரிப்பின் மீது வந்தமர்ந்தனர். மங்களவல்லி அருகிலிருந்து எடுத்துக் கொடுக்க நீலா, தனதன்பன் பாதங்களில் அழகாய் நலங் கிட்டு விசாலமான மார்பில் பரிமள சந்தனம் பூசி, நெற்றியில் ஜவ் வாது பொட்டிட்டு வாஸனை மிகுந்த ஜாதி புஷ்பங்களை நெருக்க மாய்த் தொடுத்த செண்டையும் மாலையையும் தலையிலும் கழுத்தி லும் அணித்தனள். பிறகு வெற்றிலை பாக்கு தட்டை அவள் கையில் கொடுத்து மாப்பிள்ளைக்களித்து நமஸ்காரம் செய்யும்படி சொல்ல, அருகிலிருந்த சின்னக் குட்டிகளெல்லாரும் "உம், ஏய்க்கப் பார்க்க ரேளோ ? பத்யம் சொல்ல வேண்டாமோ ! மாப்பிள்ளை நீங்க வாங்

கிக்காதேயுங்கோ" என்றார்கள். கையும் தட்டுமாய் ஸ்வர்ணச் சிலை போல நிற்கும் நீலலோசனி கீழ்வரும் பத்யத்தைச் சொன்னாள்.

பத்யம்

பலகாலம் தவம்செய்து பங்கஜாக்ஷனே உம்மோட
பாதமலர் ஸேவைக்கு பாத்ரை யானேன்
குலந்தன்னில் சிறந்ததொரு குணவந்தர் நீரென்று
குதூஹலத்துடனே நான் மாலையிட்டேன்
பலபேரும் கொண்டாடும் பாக்யவான் என்று உம்மை
பாவை நானக மகிழ்ந்து கைப்பிடித்தேன்
ஜலஜ லோசனா உந்தன் சரணம் நான் நம்பினேன்
சதியென்னை ஆதரிப்பீர் ஸரஸ நாதா!
உம்முடைய மலர்முகம் வாடும்படியே
உத்தமி நான் ஒருபோதும் நடக்கவறியேன்
பெண்ணிவள் என்றெண்ணி எந்தனை நீர்
ப்ரேமையுடனே காப்பீர் பிராண நாதா!

என்று தாம்பூலத்தட்டை முரளீதரனிடத்தளித்து, நமஸ்காரம் செய்து, பெரியோர் கட்டளைப்படி அவனுக்கெதிரில் அமர்ந்தனள். பிறகு மாப்பிள்ளை, ஸுந்தரி மணியாகிய நீலாம்பிகைக்கு நலங்கிட்டனன். முடிவில் அவனிடம் வெற்றிலைத் தாம்பாளத்தைக்கொடுத்து நீலாவிடத்தளிக்கச் செல்ல, அவனும் ஒரு கையினால் அதை அலக்ஷியமாய்வாங்கி எதிரிலிருக்கும் அவள்முன் வைத்து விட்டான். நீலாவின் தோழிகளெல்லாரும் "தேவலை மாப்பிள்ளை சமத்தே இல்லை, எங்காத்துப்பெண்மாத்திரம் பாட்டில்லாமல் வாங்கிக்கொள்வாளோ? நீர் பத்யம்சொல்லிக்கொடுத்தா லொழிய அவள் வாங்கிக்கமாட்டா" ளென்றனர். முரளீதரன் தோழனைநோக்கிச் சிரித்துக்கொண்டு "இதென்ன? இந்தக்குட்டிகள் என்னைப்பாடச் சொல்லுகிறதே என்றனன்". நடராஜன் "ஆம்படையாள் வருகிறதென்றால் சும்மா முடியுமா? தெரிந்தால் ஒன்று சொல்லேன்" என்றான். முரளீதரன் "ஏதடா பின்னும இந்தக்குட்டிகளைக் கிளறிவிடுகிறாய்; நீயாவது பாடுவாய்? எனக்கென்னடா பாடத்தெரியும்? ராஜம்! நீ சொல்லம்மா" என்றான். அவளும் அவனால் எழுதித் தான் பாடம்செய்த பத்பத்தைப் பாடினள்.

மங்கள ரூபியே மகிழ்தரும் தேவியே
எந்தனுட ஆவியே இளங்குயிலே
மங்கையர் திலகமே மாணிக்கமணியே என்
மனதினிற் கிசைந்ததொரு மடமயிலே.

எங்கள்குல தீபமெனும் ஸ்ரீங்காரவல்லியே
என்சிந்தை களி கூறவந்த பெண்களரசே
திங்களனை முகமுடைய பங்கஜாஸனி போல்வாய்
சங்கை நீ படவேண்டாம் ஸரஸ ஜாக்ஷி
மலரும் மணமும் போல மாதே நாமும்
மாநிலத்தில் வாழ்ந்திடலாம் மஹேசனருளால்
ஏதும் குறைவின்றி நம்மை ஈசன் காப்பார்
எண்ணாதே பலவிதம் இன்ப நிதியே.

உடனே, முரளீதரன் கட்டைக்கொடுக்க, நீலலோசனி இருகரங்களையும் நீட்டி வணக்கத்துடன் பெற்றுக்கொண்டனள். பிறகு சற்று நேரம் சுற்றியிருப்போர் பலவித பரிஹாஸங்கள் செய்ய இருவரும் புஷ்பப்பந்தாடினர். உடனே கொஞ்சகாலிகை ஊஞ்சலாடிவிட்டு முரளீதரன் ஹாரத்தி எடுத்தவுடன், கட்டுவிடுத்துக்கொண்டு ஓடும் இளம் ஸிம்ஹம்போல இந்தச்சிறுமிகள் நடுவினின்றும், மெதுவாய் வெளிப்பட்டு தன் தோழனுடன் மெத்தைமேல் கிருஷ்ணபாகவதர் காலக்ஷேபம் நடக்குமிடத்தை நோக்கி நடந்தான். அவ்விதமே மறுநாளும் செல்ல நான்காம் நாள் ஆசீர்வாதம், பலதானம் முதலியவைகளான பிறகு, மங்களஸ்நானம் செய்வித்து பெண்ணுக்கும் பிள்ளைக்கும் மிகவும் சிறப்பாக அலங்காரம் செய்தனர். இதற்கிடையில் எல்லாரும் சாப்பாட்டை முடித்துக்கொண்டு மனோஹரமாய் சிங்காரித்து வைத்திருக்கும் பரிமளமிகுந்த புஷ்பப் பல்லக்கில் முரளீதரனையும் நீலலோசனியையும் உட்காருவித்தனர். மணி எட்டடித்ததும், ஊர்கோலம் அநேக வகை ஆடம்பரங்களுடன் புறப்பட்டது. பிரகாச விளக்குகள் யதேஷ்டமாயிருந்ததினால் எங்கே பார்த்தாலும் ஒரே ஜோதியாய்க் காணப்பட்டதுடன், அன்று பௌர்ணமியாகையால் பூரணச்சந்திரன் நிர்மலமாய் ஆகாசத்தில் பிரகாசித்து உலகத்திலேயே இருளில்லாமல் செய்தனன். வாத்யங்களோ அந்நிலவு காலத்திற்கேற்ப செவிக்கு நிகரற்ற இன்பத்தை யளித்தது. ஜன கும்பலிற்கு நடுவில், பார்ப்பவர் கண்களைக் கவரும் பகட்டையுடைய பத்மாக்ஷியென்னும் தேவடியாள் பதம்பாடி பத்து நிமிஷத்திற்கொருதரம் கால்மணி நேரம் ஆட்டமாட அவள் சற்று ஓய்ந்த ஸமயத்தில் வாத்யக்காரர்கள் தங்கள் ஸாமர்த்தியங்களை உபயோகிக்க மிக ஸம்பிரமத்துடன் திரும்பி வீடு வந்து சேர மணி பன்னிரண்டடித்தது. குழந்தைகளை திருஷ்டி கழித்து உள்ளழைத்தனர். சற்று கண்ணயர்ந்த பிறகு, விடியற்காலம், சேஷஹோமம் முதலியன இர

மப்படி நடந்தன. அன்றே ஸம்பந்திகளுக்கு வழியனுப்பு பாவனையாகக் கட்டுச்சாதக் கூடை கொண்டுபோய் வைக்கப்பட்டது. திங்கள்கிழமை தினமே இவர்கள் இறங்கியிருந்த ஜாகைக்கு நாட்டுப் பெண்ணையழைத்து க்ருஹப்ரவேசம்செய்தனர். செவ்வாய்க்கிழமை கட்டிச் சுருட்டிக்கொண்டு எல்லோரும் பயணமாயினர். குழந்தையாகிய நீலலோசனிக்கு ஏதோ ஒருவிதமான புதிய வாஞ்சை ஒன்று ஏற்பட்டுவிட்டபடியால், முரளீதரன் ஊர்செல்வதை நினைக்கும் தோறும் அவளை அறியாமலே மனச்சங்கடம் உண்டாயிற்று. மாப்பிள்ளை செல்வதற்கு முன், மாமனாரையும் மாமியாரையும் பணிந்தான். சிவகாமியம்மாள் ஸங்கோசத்தினால் சற்றிடைந்து நின்றிருந்தனள். வெங்கடேசுவர ஐயர் பிள்ளையாண்டானை அருகழைத்து முதுகில் அன்பாய்த் தடவிக்கொண்டே என்ன, முரளீதரா, இனிமேல் நீவிற்கு திருச்சிக்கு வந்தால் எங்களை மறந்துவிடாதேயப்பா. இங்கே வந்து பத்துநாளாகிலும் இருந்துவிட்டுப் போகவேணும்" என்றனர். அவனும் அப்படியே ஆகட்டுமென்று ஒத்துக்கொண்டனன். பின்னர் எல்லாரும் விடைபெற்றுக் கொண்டனர். வெங்கடேசுவரஐயரும் கூடச்சென்று ஸௌகர்யமாக அவர்களை ரயில்வண்டியில் ஏற்றிவிட்டு வந்தனர். அனேகமாய் அவஸரமாய்ப் போகவேண்டியவர்களெல்லாம் புறப்பட்டுப் போய்விட்டபடியால், அவர் திரும்பிவந்து வீட்டில் நுழையும்போது அது மிகவும் 'வெரிச்' சென்றிருந்தது. நடுவில் ஒரு விஷயம் சொல்ல மறந்தோம். முரளீதரனுடைய மேல்படிப்பை உத்தேசித்து வெங்கடேசுவர ஐயரிடமிருந்து லக்னபத்திரிகையுடனேயே பிறரறியாமல், ரூபா மூவாயிரம் ரஹஸ்யமாய் வாங்கப்பட்டது. இம்மாதிரிப் பணம் கொடுத்துக் கல்யாணம் செய்வது, ஐயரவர்கள் மனதிற்குக் கொஞ்சமும் பொருந்தாத விஷயமாயிருந்தாலும், என்செய்வார் பாவம்! வேறுவிதியில்லை, பெண்ணுக்கோ வயது பதினொன்றாய் விட்டது! இதைவிடப் படித்த பிள்ளைகள் ஒன்றும்அகப்படவில்லை. எல்லாவற்றையும் உத்தேசித்துப் பணத்திற்குப் பால்மாறாமல், அவர்களிஷ்டம்போலக் கொடுத்துத் தன்னரும்புதல்வியை கன்னிகாதானமாய்க் கொடுத்தனர். இம்மாதிரி கார்யங்களை அனுஷ்டிக்கக்கூடாதென்று பிறர்க்குப் புத்தி புகட்டும் புனிதர்கள், தாங்களும் அதை அனுஸரித்து நடந்தால் மிகவும் சிலாக்யமாகவிருக்கும். என்ன செய்கிறது ? தான் முந்தி அவ்வாறு நடக்க முயன்றால் ஒவ்வொருவருக்கும் ஏதாகினும் அஸௌகர்யங்கள்தாம் ஏற்படுகின்றன.

## 8-வது அத்தியாயம்

### புதுமாதப் பிறப்பும், புத்தியறிந்த வைபவமும்

நல்லமாதம் என்றுஎல்லாரும்சொல்லும் தைமாதப்பிறப்பன்று ஏழைகளென்றும் பணக்காரர்களென்றும் வித்தியாஸமின்றி, வீடுகளெல்லாம் வெள்ளைபூசி காவிப்பட்டை சுண்ணாம்புப்பட்டை அடித்து மாவிலைத்தோரணங்களுடன் தென்னங்குருத்தினால் முடைந்த கூந்தலும் கட்டி ஒவ்வொருவீட்டின் முன்புறத்திலும் விநோதவிசித்ரங்களமைந்த கோலங்களமைத்து ஊரெங்கும் மங்களகரமாய் விளங்கிற்று. ஸங்கராந்தி புண்ணியகாலத்தில் புனிததீர்த்தமாடி இடுப்பிற் குடத்தில் சுத்தஜலத்துடனும் மற்றொரு கையிற்பிடித்த இஞ்சிக் கொத்து மஞ்சட்கொத்துடனும் ஸாதாரண அந்தஸ்துள்ள ஸ்திரீமணிகள் தங்கள் தங்கள் வீடுநோக்கிப் பரபரப்புடன் செல்வதையும், கையிற்பிடித்த தர்ப்பைக்கட்டுடன் வைதீகர்கள் "குடுகுடெ"ன்று அங்குமிங்கும் ஓடித்திரிவதையும், அநேகமாய் யாருடைய கரத்தை நோக்கினாலும் கருப்பங்கழியும், பரங்கிக்காய்த் துண்டமுமாய் சாரிசாரியாய் ஜனங்கள் செல்வதே தெருவிற்கு அலங்காரமாகக் காணப்பட்டது. காலையில் ஒன்பது மணிக்கு மாதம் பிறக்கிறபடியால், ஸர்வத்ராளுடைய கிருஹங்களிலும், பொங்கல் பானை வைக்கப்பட்டது. வீட்டிலுள்ள சிறுவர், சிறுமிகள் எல்லாம் பானையிலுள்ள பால் பொங்கி வழியும்போது கைதட்டிக்கொண்டு, மிக்க ஆரவாரத்துடன் "பொங்கலோ பொங்கல்" என்று ஆநந்தமாய்க் கூத்தாடினார்கள்.

பிறகு அவரவர் சக்திக்குத் தகுந்தபடி திவ்யாஹாரத்தை உட்கொண்டு குதூஹலத்துடன் இருந்தனர். நமது வெங்கடேச்வர ஐயரவர்கள் வீட்டில் எல்லோரையும் விட விசேஷக் கொண்டாட்டமாக இருந்தது. காரணமென்னவோ? ஒருக்கால், அருமை மாப்பிள்ளை வந்திருக்கிறாரே, அதனாலிருக்கலாம். அன்று சுக்கிரவாரமாகையாலும் பண்டிகை தினமும் ஒத்துக்கொண்டிருக்கிறபடியினாலும் புராதன ஸம்பிரதாயத்தை அநுஸரித்த பெரியோர்களுடைய ஏற்பாட்டின்படி, அன்று ஸாயங்காலம் பூங்கொடிபோன்ற நீலாம்பிகை நலங்கிடவேணுமென்பதாகத் தீர்மானிக்கப்பட்டிருந்தது. மாப்பிள்ளை மாத்திரம் வெளிக்கோ, அல்லது நிஜமாகவேயோ, அதற்கு ஸம்மதப்படாத

வனைப்போலக் காட்டிக்கொண்டான். நீலலோசனியும் முன்போல சிறிய பெண்ணாயில்லாமல் சற்றுவயதடைந்த படியினால் அடக்கமும் நாணமும் மேலிட்டவளாய் நலங்கிடுவதற்கு அஸம்மதமுள்ளவளாகக் காணப்பட்டாள். பிறகு அவனன்னை முதலியோர் வேறு ஒருவரையும் கூப்பிட்டு கூட்டம் கூட்டுகிறதில்லை என்றும், அவள் தந்தை கச்சேரியிலிருந் துவந்தபிறகு ஆறுமணிஸமயாருக்கு வீட்டிலுள்ளவர்கள் மாத்திர மிருக்க நலங்கிடலாமென்றும் சொல்ல ஒருவாறு ஸம்மதித்தாள். பகல் மணி ஒன்றடித்தது. பத்மலோசனியாகிய நீலாவின் தோழி, அம்மணி என்பவள் வந்து, "அம்மாமி! உங்களுக்குப்பேரன் பிறந்திருக்கிறான். எனக்குச் சர்க்கரை கொடுங்கள்" என்றாள். சிவகாமி அம்மாள் ஒன்றும் புரியாதவளாய், "என்னடி, கேலி செய்கிறாய். தன்னாலே ஸ்வாமி கிருபையிருந்தால் பேரன் பிறக்கிறான். பேத்தியுங்கூடப் பிறக்கிறாள். உனக்கு வேண்டுமானால் சர்க்கரை வாங்கிக்கொள்ளேன்," என்றாள். அதற்கு அவள் "நானா கேலிசெய்கிறேன்? பொய்சொல்லுவதாக எண்ணினீர்களா? நீலாம்பா பெரியவளாயிருக்கிறாள். அங்கே கொல்லைத்தாழ்வாரத்தில் நிற்கிறாள். வாருங்கள் காட்டுகிறேன்" என்றாள். சிவகாமியம்மாள் திடுக்கிட்டவளாய் எழுந்து ஓடிவந்து வாசற்படி தாண்டியவுடன் மையணிந்த கடல் போன்ற விசால நேத்திரங்களினின்றும் முத்துமுத்தாய் நீரை யுதிர்த்து கால்விரலினால் நிலத்தைக்கீறிக்கொண்டு நிற்கும் தன்பெண்ணைக் கண்டனள். உடனே அம்மணி வார்த்தையின் உண்மையை அறிந்தவளாய், குழந்தையை ஓர் புறத்திலிருக்க ஏற்பாடுசெய்து, வாசல் மெழுகி மாக்கோலம்போட்டுத் தனது புருஷனுக்கு ஸமயம் பார்த்து செய்தியைத் தெரிவிக்கும்படி ஆளை அனுப்பிவிட்டு, ஸமீபத்திலிருந்த ஐந்தாறு ஸுமங்கலிகளை யழைத்து, ஸம்பிரதாயப்படி கோலத்தின்மீது கலநெல்லைக்கொட்டி அடிபரப்பி அதன்மேல் பட்டுப்பாயை விரித்து நீலலோசனியை அமரவைத்துப் பாடினார்கள்.

மணி ஐந்தரை ஆனவுடன் வெங்கடேசவரய்யர் வீடு வந்தனர். பிறகு பத்து நிமிஷத்திற்கெல்லாம் முரளீதரனும் வெளியிலிருந்து வந்தனன். ஐயரவர்கள் முதலில், ஸம்மந்திக்கும் தனது ஸஹோதரிக்கும் இச்சுப ஸமாசாரத்தைப் பற்றியும் உடனே வரவேண்டுமென்பதாகவும் தந்தியனுப்பி விட்டனர். பிறகு சிறிது ச்ரம பரிஹாரம் செய்துகொண்டவுடன் முரளீதரன் வந்து, அவரமர்ந்திருக்கும் நாற்காலியருகில் நின்று, "எனக்கு காலேஜ் இன்னம் நாலைந்து தினத்தில் திறக்கிறார்கள். போகும்போது திருச்சியில் வந்து இரண்டு

நாளிருக்கும்படி அப்பாசொல்லியிருக்கிறார். ஆகையால் நான் இன்று ஸாயந்திர வண்டியில் புறப்பட்டு ஊருக்குப் போக வேண்டும்" என்றான். அவர் நகை முகத்துடன் "காலையில் இந்த வார்த்தையைக் காணோமே; புது ஸமாசாரம் கேட்டவுடன், ஏற்பாடும் புதிதாய் விட்டாற் போலிருக்கிறது. ஸரி, உன்னிஷ்டம்" என்றார். உடனே முரளீதரனும், ஆகாரம் செய்து மாமன் மாமிகளிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு புறப்பட்டான். வெங்கடேசுவர ஐயரும் ஸ்டேஷன் வரை வருவதாகச் சொல்லி உடன் வந்தனர். திருச்சிக்கு டிக்கெட் வாங்கி, ஸௌகர்யமாக மாப்பிள்ளையை ஏற்றிவிட்டு உடம்பை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொண்டு நன்றாய்ப் படிக்கும்படி புரைத்துத் திரும்பினர்.

வண்டி தஞ்சை ஸ்டேஷன் வந்து நின்றவுடன், முரளீதரன் கீழே இறங்கி, சிறிது யோசனையுடன் கொஞ்சம் உலாவிக்கொண்டிருந்தவன் ஒரு முடிவுக்கு வந்தாற்போல டிக்கெட் அளிக்கும் அறையை நாடிச்சென்று, நேரே எழும்பூருக்கு டிக்கெட் வாங்கிக்கொண்டு அடுத்த ரயிலில் புறப்பட்டு விட்டான். அந்தோ! என்ன ஆச்சர்யம்! இவனுக்கென்ன பயித்தியமா? திருச்சிக்கு டிக்கெட் வாங்கி விட்டு, நடுவழியில் சென்னைக்குப் புறப்பட்ட ஸமாசாரமென்ன? அவான் கிருஹ கிருத்யத்தை யாரறிவார்? ஒருக்கால் தனது ஸம்ஸாரம் பெரியவளாய் விட்டபடியால் தனது சித்தம்மை சீக்கிரம் சாந்திசெய்ய வேண்டுமென்று கட்டாயப் படுத்தினால் தனக்குத் தடுத்துச் சொல்வதற்கு கஷ்டமாயிருக்குமென்னும் உத்தேசமோ, வேறெதுவோ? மறுநாள் காலை எழும்பூர் ஸ்டேஷனையடைந்து தான் வஸிக்கும் வீட்டை நோக்கிச் சென்றனன். அவனைக் கண்ட நேசன் ஆச்சர்யத்துடன், "ஏதப்பா! செவ்வாய்க்கிழமை காலை வருவதாக எழுதியிருந்தாய், மூன்று நாள் முன்னதாகவே வந்து விட்டாய். என்ன விசேஷம்?" என்றான். "அதெல்லாம் ஒன்றுமில்லை. இரண்டுநாள் முன்னடி வந்தால் ச்ரமமில்லாமலிருக்கும் என்பதனால் வந்தேன். இதில் விசேஷமென்ன" என்றான். இவர்களிப்படியிருக்க, நாகையில் நீலாம்பாளின் ஸ்நான தினத்தன்று வெகு விமரிசையாய் ஸம்பிரதாயப்படி குறைவற ஸகல காரியங்களும் நடந்தேறின.

அலர்மேலம்மாள், நாட்டுப்பெண்ணுக்கு அரக்கொரு பக்கம் மஞ்சளொரு பக்கம் கரைபோட்ட பச்சை கொட்டடி காஞ்சிபுரம் சேலை யொன்று, பழம், பாக்கு வெற்றிலையுடன் ருதுஸ்நானத்திற்குப் பரிசளித்தனள். அன்று ஸாயந்திரம் ஊரிலுள்ள மங்கையர்களை

மஞ்சட் குங்குமத்திற் கழைத்து, முன்ஹாலே தேவலோகம் போல சிங்காரித்து நடுவில் தஞ்சாவூர் வேலைப்பாடமைந்த கற்கள் பதித்த வட்டமாய்ச் சுழன்று கொண்டிருக்கும் அழகிய பதுமைகளமைந்து நவ நாகரீகமா யலங்கரித்த மகாத்தில், ஸ்வர்ணாங்கியாகிய நீலாம் பாளை ஸர்வாபரண பூஷிதையாய் உட்காரவைத்தனர். ஸுமார் எட்டரைமணி வரையில் தாஸி கமலாக்ஷி என்பவளின் பாட்டுக் கச்சேரி நடந்தது. எல்லாருடைய கண்களென்னும் வண்டுகள் பொற் கொடியாகிய நீலாம்பிகையின் முகஸரோருஹத்தில் ஒளிவீசும் அழ கென்னும் தேனைப்பருகி ஆனந்தமுற்றன. கச்சேரி முடிந்தவுடன், ஹாரத்தி எடுத்து திருஷ்டி கழித்து பெண்மணியை உள்ளழைத்துச் சென்றனர். மறுநாள் செவ்வாயன்று ஸம்மந்தி அம்மாள், ஊருக் குப் பிரயாணமானாள். புறப்படும்போது, சிவகாமி அம்மாளிடம், சித்திரை வைகாசியிலேயே, சாந்தி முகூர்த்தம் நடத்தி விட்டால், ஸௌகர்யமாக யிருக்குமென்று தன் எஜமானர் அபிப்பிராயப்படுவ தாயும், அது விஷயமாய் அவாள் ஸதிபதிகள் யோசித்துக்கொண்டு கடிதமெழுதி யனுப்பும்படியும் சொல்லிவிட்டுப், புறப்பட்டுச் சென் றனள். சிவகாமிஅம்மாள் இவ்வார்த்தைகளால் கலங்கினவளாய் ஸம் மந்தியை வழியனுப்பிவிட்டு உட்சென்றனள்.

மங்களவல்லி:—(மதனிமுகத்தின் வேறுபாட்டை யறிந்து) "என் மன்னி, என்ன விசேஷம்? அலமேலு சாந்தி கல்யாணத்தைப் பற்றி பிரஸ்தாபித்தாளோ"

சிவகாமியம்மாள் :—"ஆம் அம்மா, அது உங்களுக்கு எப்படித்தெரி யும்? நீங்கள்தான் உள்ளே யிருந்தீர்களே."

மங்கள:—"உன் முகம் சொல்லுகிறதே! இதைப்பற்றி அண்ணாவி னிடம் சொன்னால் அவர் கோபிப்பார். அவளானால் அதி சீக் கிரம் கெடுவைத்துப் போயிருக்கிறாள். இவைகளை நினைத்து நீ தர்மஸங்கடப்படுகிறாய். என்ன அவஸரம் ? மாப்பிள்ளை, பி. எல். பாஸ் செய்யட்டுமே, அதற்குள் அவளுக்கும் கிட்டத் தட்ட பதினைந்து பிராயமாய்விடும். அண்ணாவும் ஆக்ஷேப மொன்றும் சொல்லார்.

சிவகாமி:—"அதென்னமோ! எப்படி யிருந்தாலும் நாம் பெண் ணைப் பெற்றவர்கள். அவாளிஷ்டத்திற்கு இணங்கித்தான் போக வேண்டும். ஸமயம் பார்த்து உங்கள் தனயன் காதில்போட்டு விடுகிறேன். பிறகு அவர்பாடு, அவாள் பாடு. எப்படியாகி லும் ஆய்விட்டுப் போகிறது."

ஐயரவர்கள் அங்குவர, அவர்கள் ஸம்பாஷணை அத னோடு முடிவுபெற்றது.

# 9-வது அத்தியாயம்

## அபாரக் கவலையும் அன்பர்களின் வார்த்தையும்

பௌர்ணமியன்று இரவு ஆகாயத்தில் சந்திரன் நிர்மலமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருந்தான். தென்றற்காற்று மனோஹரமாய் வீசி மனக்கவலையுற்றோரை அன்புடன் உபசரித்துக்கொண்டிருந்தது. ஊரோசை யடங்கி யாவரும் நித்திரை புரியும் நேரமாகையால் ஸமுத்திரத்தின் கோஷத்தையும் காற்றினு லலைவுறும் இலைகளின் சலசலப்பும் தவிர, வேறோர் ஒலியும் இல்லாத ஸமயமான அந்த நள்ளிருளில் தங்கசாலைத்தெருவில் 86—ம் இலக்கமுள்ள ஒரு வீட்டின் மெத்தையின்மீது தாழ்வாரத்தில் களங்கமற்று ஒளிவீசும் அவ்வெண்ணிலவில் இருபத்திரண்டு பிராயத் தோற்றமுள்ள இளங் குமரன் ஒருவன் தன்னந்தனியே கவலையுற்ற மனதுடன் ஓர் சாய்வு நாற்காலியில் அமர்ந்து, ஆகாயத்தைப் பார்த்தவண்ணமாய் ஆலோசித்திருந்தனன். சுமார் ஒருமணிநேர மிவ்விதம் செல்ல, அவனை அருகிற் படுக்கையிற்காணுத அவன் நேசன், "முரளீதரா! தனியாய் அங்கென்ன செய்கிறாய்?" என்றுரைத்துக் கொண்டு அங்குவர, "ஒன்றுமில்லையப்பா, செய்வதென்ன என்னமோ எனக்கு தூக்கம்வரவில்லை. இருட்டில் படுத்துப் புரண்டுகொண்டிருப்பதைவிட, இந்நிலவி லமர்ந்து, ஆகாயத்திலுள்ள விநோத காட்சிகளைக் கண்ணுற்றிருக்கிறேன்" என்றனன்.

நட. நேசா! நான் சொல்லுகிறேனே என்று நீ வருத்தப்படாதே. ஆனால் நீ முன்போல இப்பொழுது இருக்கவில்லை. அதின் காரணம் நான் என்ன பிரயாசைப்பட்டும், என்னாலறிய முடியவில்லை. ஒருக்கால் நானேதாகிலும் தவறி நடந்தேனோ வென்றால் என் மனப்பூர்வமாய் அப்படி யொன்றும் செய்ததாகத் தெரியவில்லை. உன்னை எனது உயிர்நிலையாகக் கருதியிருக்கிறேன். அவ்விதமிருக்க, நீவேறாக நினைந்தா லென்மனம் பண்ணுவது ஈசனே அறிவான்.

முர. நடராஜா! என்ன அவ்விதமுரைக்கிறாய்? நான் உன் விஷயத்தில் நீ அபிப்ராயப் படுவதைப்போல் ஒன்றும் வித்தியாஸம் பாராட்டவில்லையே. நீ எந்த ஸமாசாரத்தைக் கொண்டு இவ்வித முரைக்கிறாய்?

நட. ஆமப்பா, உன்மேற்பழிசொல்வது தப்புத்தான். பார், நேற்று மத்தியானம் ஏதோ 'பிரமாதமாய் ஒரு கடிதம் வந்ததே. அதைப்படித்ததுமுதல் உன்முகம் கொஞ்சங்கூட சரியாயில்லே. நீயாக இதுவரையில் என்னிடம் உனது துயரத்தைப்பற்றி யுரைப்பாயென எண்ணிப் பொறுத்திருந்தேன். நீ தனியே நினைந்து வருந்துகிறாயேயன்றி, என்னிடத் துரைத்தாயில்லே. இதை நினைத்தாலே எனக்கு துக்கமா யிருக்கிறது.

முர. பைத்தியமே, இதற்காகவா வருந்துகிறாய். கடிதம் அப்பா எழுதி யிருக்கிறார். சித்தியம்மாள் போதனை முறைப்படி அதில் வரையப்பட்டிருக்கிறது. இன்னும் ஒருவாரத்தில் சாந்தி கல்யாணத்திற்கு முகூர்த்தம் வைக்க வேண்டுமாம். நாலுநாள் லீவு வாங்கிக்கொண்டு, புதன்கிழமை ஸாயந்திரம் வண்டியில் புறப்பட்டு வரும்படி எழுதி யிருக்கிறார். தங்கை ராஜத்தை அவள் புக்ககத்தில் நிரம்பவும் ஹிம்ஸை செய்கிறார்களாம். இந்த கல்யாணத்தைச் சாக்கிட்டு அவளை யழைத்துவந்து திரும்ப அனுப்பாமலிருக்க ஆலோசித்திருக்கிறதுடன், ஏதோ சில ரஹஸ்ய விஷயங்கள் நேரில் பேசவேண்டி யிருப்பதாலும் புதன்கிழமையிலிருந்து, சனி, ஞாயிறு போகச் செவ்வாய் வரையில், லீவெடுத்துக்கொண்டு வரும்படி எழுதியிருக்கிறார். இவைகளைப்பற்றி சிந்தித்தால் ஏதோவிஷயம் இருக்கிறதாகத் தோன்றுகிறது. மனம் கவலே யுறுகிறது.

நட. இப்போ தெரிந்ததப்பா. ஆஸாமி யோசனைக்குக் காரணம் சாந்தி கல்யாணம். ஆனால் பிறகு ஆம்படையாளைப் பிரிந்து இருக்கவேணுமே என்று வருத்தம்போ லிருக்கிறது.

முர. போடா, முட்டாளே, உனக்கு எப்பொழுதும் விளையாட்டுத் தான். இவ்வளவுநாள் எனது காலம் எவ்வளவு நிம்மதியாய்க் கடந்ததோ அம்மாதிரி இனி இருக்க முடியாதுபார். ஒரு குடும்பத்தில் ஸர்வத்திராளுடைய மனதிற்கும் ஸந்துஷ்டியுண்டாக ஒரு மனிதன் நடப்பதென்றால் அதில் எவ்வளவு ச்ரமமிருக்கின்றதென்பதை வார்த்தைகளால் உரைத்து முடியாது.

நட. முரளீதரா, உன்கஷ்ட நிஷ்டூரங்களை நானறியாதவனல்ல. அதை உத்தேசித்து இப்பொழுது நீ கவலைப்படுவதில் பிரயோசனமென்ன? பெரியவர்களாய் உனது நோக்கமறிந்து, படிப்பு முடிந்த பிறகு முகூர்த்தம் வைத்துக் கொண்டால் தேவலே.

இன்னும் ஒருவருஷத்துப் படிப்பும் முடிவதற்குள் ஏதோ அவஸரப்பட்டு அவர்கள் கல்யாணத்திற்கு யத்தனித்தால் அவர்களிஷ்டம் போலத்தானே நீ நடக்கவேணும். அப்படித் தான் சாந்தி நடந்தாலும் உன்படிப்புக்கு யாதொரு விக்னமும் உண்டாக இடமில்லையென்று எனக்குத் தோன்றுகிறது.

முர:—(நகைத்து) சித்தியப்பா ஸமாசாரம் பூராவும் உனக்குத் தெரியாது. என் வாயினால் அதை நான் ஏன் சொல்ல வேண்டும்? எதுவும் ஜகதீசன் கட்டளைக்கு எள்ளளவும் மாறாக நடக்கப்போவதில்லை, பார்க்கலாம். நாம் கவலைப்பட்டு ஒன்றும் பிரயோசனமில்லைதான்.

இதற்குள் மணி மூன்றடித்தது. அதுவரை முரளீதரன் கண் மூடவில்லையாதலால், சிறிது படுக்கையிற் சயனித்து நித்திரை செய்தான்.

சாந்தி கல்யாணத்தின்பொழுது பெண் வீட்டார் செய்ய வேண்டிய ஸ்ரீதன விஷயமாய், 'பிள்ளையாண்டான்' ரொக்கமாய் அபேக்ஷிப்பதால் வெள்ளிப் பாத்திரம் முதலிய மற்ற ஸமாசாரங்கள் தங்களுக்குத் தேவையில்லை யென்றும், அவனது இஷ்டம்போலவே ரூ. 2,500 முகூர்த்த காலத்திற்கு முன்னதாகவே கொடுத்துவிட ஒன்றும் ஆக்ஷேபணை செய்யக் கூடாதென்றும், தானும் சிற்றம்மையும் யோசித்து, மாமனாருக்குக் கடிதமெழுதியிருக்கிறபடியினால் அது விஷயத்தில் தான் அதிருப்தியாவது அஸம்மதமாவது காட்டக் கூடாதென்று, சங்கர நாராயண ஐயர் கடிதத்தில் எழுதியிருந்ததே முரளீதரனுக்கு அவ்வளவுவருத்தத்திற்குக்காரணம். என்செய்வான்? பாபம்! அவன் மஹாமானி. இப்படிப்பட்ட காரியங்கள் அவன் மனதிற்கு ஒப்புகிறதில்லை. இதனுடன், விவேகியான தனது தந்தை கேவலம் ஒருஸ்திரீயின் வழிபட்டு ந்யாயம் தெரியாமல் சூஸ்திரப் பாவை போலாடுகிறாரே என்று ஒரு புறமும், கஷ்டமோ ஸுகமோ, மாமியார் வீட்டோடு புருஷனிடம் வாழும்பெண்ணை வீட்டிலழைத்து வைத்துக்கொண்டு இனி விடப்போவதில்லை யென்று எழுதியிருப்பதைப் பார்த்து உலகம் சிரிக்கும் வழியை உபாயமாய்த் தேடிக் கொள்ளப் பிரயாஸைப்படுகிறாரே என்று, மற்றொருபுறமும் நினைந்து வருந்திக் கொண்டிருந்தான். ஆம், நிஜமே, சங்கரநாராயண ஐயரென்ன படித்தவரில்லையா? அப்படிப்பட்டவர் இப்படித் தாறுமாறாய் ஆரம்பிப்பதின் கருத்தென்ன? படிப்புடன் உலக விவகாரங்களையும்

தேர்ந்தறியாத உத்தமர்களின் வாழ்க்கை இவ்விதமே. "குடித்தனமோ துரைத்தனமோ" என்பதற்கேற்ப, ஒருதேசத்திற்கதிபதியானவன் தனது நிலைமையையும் கடமையையும் தெரிந்து செங்கோல் செலுத்தினல் அவனது ஆளுகைக்கு உட்பட்ட ஜனங்கள் மிக திருப்தியுடன் இருப்பது ஸஹஜமேபோல், ஒரு குடித்தனத்திற்குத் தலைவனைப் பெயர் வைத்துக்கொண்டிருப்போன், தனது உன்னத ஸ்தானத்தின் மஹிமையை ஸரியானபடி காப்பாற்றிக்கொள்ள, தக்க விதத்தில் நிர்வாகியாக இருக்க வேண்டியே, ஒரு குடும்ப அதிகாரியை அரசனுக்கு ஒப்பிட்டுக் கூறியிருக்கிறார்கள். இது வரையில் குழந்தைகள் சிறியவர்களாய் இருந்தார்கள். ஆகவே முழுமையும் அம்மாள் சொற்படி நடப்பதனல் ஒன்றும் குற்றமேற்படவில்லை. ஆனல் இப்பொழுதோ அவர்கள் வயதடைந்து அன்னிய குடும்பங்களில் ஸம்பந்தம் ஏற்பட்டு விட்டது. அப்படியிருக்க, புத்தியுள்ள குடும்பத்தலைவன் யுக்தாயுக்தம் பார்த்து நடவாமலிப்படி யோசனையில்லாத காரியத்தைச் செய்வதென்றல், அவனுடன் சேர்ந்த யாவருக்கும் அது பழிப்புக் கிடமே யாகுமென்பதில் ஸந்தேகம் சிறிதுமில்லை யல்லவா?

## பத்தாம் அத்தியாயம்

### அன்புள்ள காதலர்கள்

முர. கண்மணீ! ஏன் இன்னம் இவ்விதம் லஜ்ஜைப்படுகிறாய்? நீ மற்றவர்களைப்போல ஒரு ஸாதாரணப் பெண்ணா யில்லாமல் ஸர்வ விதத்திலும் என் சித்தங்களிக்கச் செய்யும் உத்தமி என்றெண்ணியிருக்க, வார்த்தைக்கே என்னை ஏமாறும்படி செய்கிறாயே?

நீலா. இல்லை ; நாதா ! தாங்கள் நாளையதினம் புறப்பட்டு ஊருக்குப் போகிறதாக காதில் பட்டது. அந்த வருத்தத்தினால் ஏதோ யோசித்துக் கொண்டிருந்து விட்டேன். மன்னிக்கவேணும். இதற்குமுன் தாங்களூருக்குப் போவதாயிருந்தால் என் மனம் இவ்வளவு பாடுபட்டதில்லை. இப்பொழுதோ, இந்த இரண்டு நாளைய நெருங்கிய பழக்கத்தினால், இனி தங்களைப் பிரிந்தால் என் உயிரே போய்விடும்போல அவ்வளவு ஸங்கட முண்டாகிறது.

முர. பிரியரமணீ! உன்னை விட்டுப் பிரிந்திருப்ப தென்றால் என்மனம் மாத்திரம் ஸஹிக்குமா? என்செய்வது கண்ணே! காலத்தையுத் தேசித்து இன்னும் இரண்டு வருஷகாலம் நாம் பிரிந்திருக்க வேண்டியவர்களே. பிறகு சிறிது ஸம்பாத்தியத்திற்கு வழி ஏற்பட்டுவிடில், நாம் மலரும் மணமும் போல பிரியாமல் வாழ ஈசனருள் புரிவார்.

நீலா. ஏது பிராணதாரா! தாங்கள் சொல்வதைப் பார்த்தால் லீவிற்குகூட இங்கு வரமாட்டீர்கள் போலும்! ஏனப்படி ? நான் செய்த பாபமா? இவ்வளவுநாள் தவறாமல் லீவிற்கு வந்து கொண்டிருந்தவர் இனி அப்படி வரேனென்றால் ஏதோ கொஞ்சம் விசேஷமிருக்கிறாற்போ லிருக்கிறதே.

முர. (மகிழ்ச்சியுடன் நகைத்து) " சுந்தரீ ! என்ன ? என்னை வாதுக் கழைக்கிறாய் ! படிக்க வேண்டிய புஸ்தகங்கள் யதேஷ்டமாக யிருக்கின்றன! பரீக்ஷையோ கிட்டிவிட்டது! இந்த லீவில் என்னுடன் படிப்பவர்கள், மூன்றுபேர்கூட தாங்களும் ஊர் செல்லாமல் என்னோடிருந்து படிப்பதாக ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அதனால் வருகிறதில்லை என்றேனே ஒழிய வேறென்ன

விசேஷம்? நீ சொன்னால் வீட்டிற்கு வருகிறேன், பின்னடி எப்படியாகிலும் பார்த்துக் கொள்கிறேன்."

நீலா. "பிராணநாதா! தாங்களின்ன, என்னை சுத்த மட்டி யென்று தீர்மானித்து விட்டாற்போ லிருக்கிறது. முன்னடியே படிப் பின் நிமித்தம் வரமுடியாதென்று சொல்லி யிருந்தீர்களானல் நான் மேலே பேசுவேனா? என்னவென்றாலும் நான் கேவலம் ஸ்திரீதானே? எவ்வளவு புத்திசாலித்தனமாய் நடந்து கொள்ள வேணுமென்று பிரயத்தனப்பட்டாலும், அன்பின் மிகுதியினால் ஆசைப்பட்டு இப்படி வார்த்தைகளை வெளியிடும் படி வந்து சேருகிறது.

முர. பெண்மணீ! உன்னுடன் பேசி என்னால் ஜயிக்க முடியவும் முடியாது. அதை நான் அபேக்ஷிக்கவுமில்லை. இனிமேல் சொல்லப்போகும் விஷயத்தைக் கவனித்துக்கேட்டு அதன்படி நடக்க வேண்டும். நீ மிகவும் புத்திசாலியாகையால் உனக்கதிகமாய்ச் சொல்வது அனாவசியம். நான் நாளை ரயிலில் புறப்பட்டுப்போய் விடுவேன். உன்னை எனது தகப்பனர் தாயார் இன்னம் சில மாதங்கள் வரையில் இங்கு வைத்துக்கொள்ள அபேக்ஷிக்கிறார்கள். எவ்விதத்திலும் அவர்கள் மனதிற்கு ஆயாஸமின்றி நடந்துகொள்ளும் திறமை உன்னிடம் உண்டு என்பது எனக்கு நன்றாய்த் தெரியும். ஆகையால்தான் அதைப்பற்றி யொன்றும் சொல்லவில்லை. உனக்கு ஒழிந்த ஸமயங்களில் படிப்பு விஷயத்தில் சிரத்தை எடுத்துக்கொள். இதோ பார்! என் மேல்விலாஸம் அடங்கிய இருபத்தைந்து கவர்கள்; ஸ்டாம்பு ஒட்டி இருக்கின்றன. அதோ மேஜைமீதுள்ள உனது கைப் பெட்டியில் வைத்துப் பூட்டிக்கொண்டு, உனது ஸௌகர்யம் போல வாரத்தில் ஒன்று அல்லது இரண்டு கடிதமெழுது. எனது துயரத்தை ஆற்றக்கூடியது இந்த மெல்லிய மலர்க்கரத் தால் எழுதப்படும் கடிதங்களே, என்று அன்புடன் அவளது கையைப்பற்றி முத்தமிட்டனன்.

அவனது மொழிகளைக் கவனித்துவந்த நீலலோசனி முடிவில் மட்டற்ற அன்புடன் முத்தமிட்டவுடன் உள்ளடங்கியிருந்த துக்கம் மேலெழச் சித்திரப் பிரதிமைபோல அசையாமல் அமர்ந்திருக்கக் கண்ட முரளீதரன், அவள்மலர்முகத்தைச்சற்றுநிமிர்த்தலும் சேலைப் பழித்த விசால நேத்திரங்களினின்றும் முத்து முத்தாய் நீருதிர்வ

தைக்கண்டு திடுக்கிட்டவனாய் அவளை யணைத்து "கண்மணீ! நீ இவ்வாறு மனங்கலங்கினால் உன்னைப் பிரிந்துபோகும் எனது மனம் எப்படிபடுமென்பதை நீ யோசிக்கவேண்டாமா?" என்று துயரத்தினால் தழதழத்தகுரலில் சொல்ல, அவளும் சோகத்துடன் தனதிருதுவாகிய கரங்களால் அவனைத் தழுவினவளாய் "பிராணநாதா! என்னை க்ஷமியுங்கள். நான் அறிவீனத்தால் கண்ணீருதிர்த்து தமது மனம் புண்ணாகச் செய்தேன். ஒருவிதத்திலும் மனங்கலங்காமல் தாங்கள் போய் வாருங்கள். தமதாக்ஞைப்படியே என்னாலியன்றவளவு நடந்து கொள்ளுகிறேன். பிராணப்ரியா! தாங்கள் ஏதோ இப்போ புதிதாக எடுத்துக்கொண்டதாகச் சொன்ன புகைப்படத்திலொன்றுமாத்திரம் என்மீது கிருபைசெய்து அளித்துப்போகும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்," என, அவனும் அவ்விதமே அதை அவளுக் களித்தனன். அன்றிரவு இவ்விதம் செல்ல, மறுநாள் இரவு மெயிலில் முரளீதரன் எல்லாரிடத்திலும் விடைபெற்று நடராஜன் ஸஹிதம் புறப்பட்டு சென்னை வந்துசேர்ந்தனன்.

சாந்தி கல்யாணத்திற்கு வந்தோர் யாவரும், அவரவர் புறப்பட்டு ஊர் போய்ச் சேர்ந்தனர். வெங்கடேசய்யர் ஸம்பந்தியினிடம் எல்லாரையும் அழைத்துக் கொண்டுபோய் வருவதாகச் சொல்ல, அவர் தனது நாட்டுப்பெண்ணை யங்குவிட்டுப் போகும்படி சொல்லினர். இப்பொழுது அழைத்துப்போய்த் திரும்ப நாலு தினத்தில் நல்ல வேளை பார்த்துக் கொண்டுவிடுவதாக நிரம்பவும் நயந்து கேட்க, மிக கஷ்டத்துடன் அவர் ஒப்புக்கொண்டார்.

பெண்களைப் பெற்றோர், பகவானுக்கு என்ன அபராதம் செய்தார்களோ தெரியவில்லை. இல்லையேல், ஏனவர்களுக்கு இவ்விதம் தண்டனை விதிக்கிறார். பெற்று, கண்ணிற்குக் கண்ணாய் வளர்த்து, பார்த்துப் பார்த்து நகைகளைச்செய்து, கால்முதல் தலைவரை யணிந்து போறுததற்கு விதவிதமாய் ஸ்த்ரீதனமுமளித்து கையில் ரொக்கமும் கொடுக்க, அவரவர் சக்திக்கு மிஞ்சியே கடமைப் பட்டவர்களாயிருக்கிறார்கள். இதெல்லாம் போனாலும் போகட்டும். பெண் வீட்டவர்களை அவமதிப்பதற்குப், பிள்ளைகளைப் பெற்றோர் முழு அதிகாரமும் பெற்றிருக்கிறார்கள். இந்த விதியை யார் ஏற்படுத்தினார்களோ தெரியவில்லை. இதைப்பற்றி அதிகமெழுதிப் படிப்பவர்களை ச்ரமப்படுத்த இஷ்டமில்லாத படியால் இதனுடன் நிறுத்துகிறோம்.

## பதினேழும் அத்தியாயம்

### வம்பினுல் வரும் துன்பம்

" அம்மா ராஜம் எங்கேயடி போனுய்? அவளெங்கேடி மன்னி? அழைச்சுண்டுவா. இரண்டுபேருக்கும் பழையது கையில் போடு கிறேன்" என்று அலமேலு அம்மாள் பெண்ணேயழைத்தனள். அவளது குரல் கேட்ட நீலாம்பாள், துரிதமாய் இரண்டு இலைக் கிழிசல்களைப்போட்டு, அதில் ஊறுகாய் எடுத்துவைத்து, நாத்தனுரையும் அழைத்து வந்து மாமியார் சொற்படி உட்கார, அலமேலு அம்மாள் திவ்யமான தயிருடன்கூடிய பழைய அமுதை நன்ருய்ப் பிசைந்து, மேற்கூறிய இருவர்களுக்கும் கரத்திலிட, அவர்கள் அமிர்தம்போல் அதை யுட்கொண்டனர். பின்னர் அப்பெண்மணிகளின் கரியகூந்தலை பரிமளங்கமழும் அருமையான தைலத்தைத் தடவிவாரிப் பின்னல் போட்டனள். நீலாம்பாளையழைத்து சமையலுக்குக்காய்கறி நறுக்கிக் கொடுக்கும்படியும் ராஜத்தை தயிர்கடையும்படியும் ஏற்பாடு செய்துவிட்டு, அம்மாள் வெள்ளி டம்ளரில் காப்பியை எடுத்துக்கொண்டு ஐயரவர்கள் கச்சேரிக் கூடத்திற்கு வந்து சேர்ந்தனள். அவள் வரவைக் கண்ட அவரும் கைபேபரைக் கீழேவைத்துவிட்டு, " ஏன் இவ்வளவு நாமதம்? சற்றுசீக்கிரம் கொடுக்கலாகாதா? பத்துமணிக்கு கச்சேரி போகிறவனுக்கு இப்படித்தான் கொடுக்கிறதா"? என்றுரைத்துக்கொண்டே அதைவாங்கிப் பருகிஞர். பிறகு கொஞ்சம் இரஹஸ்யம் பேசிஞர். அவள் அவ்வறையைவிட்டு வெளிப்பட்டவுடனேயே, கூடவே சங்கரநாராயண ஐயரும், "என்ன அம்மாவாள்! நான் ஸ்நானத்திற்கு வரலாமா" வென்று உட்கட்டில் நுழைந்தனர். அவர் பேட்டிக்காகத் தெருவில் காத்துக்கொண்டிருந்த கீழ்த்தர உத்தியோகஸ்தர்கள் காலைமுதல் காப்பிகூட சாப்பிடாமல் ஒன்பது மணி வரையில் காத்துக்கிடப்பவர்கள், ஐந்து நிமிஷத்திற் கொருக்கால், பத்துநிமிஷத்திற் கொருதரம் ஜாடையாய் ஸேவகர்களை யழைத்து, " எஜமான் என்ன செய்கிருர்? பார்க்க ஸமயமா ?" என, "இப்போ முடியாது, பேபர் படித்துக்கொண்டிருக்கிருர். இப்போ ஸரிப்படாது, காபி சாப்பிடுகிருர். இது ஸமயமல்ல; அம்மாளுடன் வார்த்தையாடுகிருர். இதென்ன ஐயா,சும்மா அலட்டுகிறீர்கள்? அவர் ஸ்நானத்திற்குப் போய்விட்டார்" என்னும் ஸமயத்துக்குத்தக்க பதில் அவர்க

ளுக்கு வந்துகொண்டேயிருக்கும். முடிவிலவர்கள் ஏமாந்தவர்களாய் ஐயரவர்கள் ஸ்நான போஜனம் முடித்து கச்சேரி செல்வதற்குள், தாங்களும் அங்கு போகவேண்டியவர்களாகையால் விரைவில் வீடு நோக்கிச் சென்றனர்.

பின்னர் ஐயரவர்கள் கச்சேரி செல்ல, பெண்மணிகளிருவர்களுடனும் அலமேலு அம்மாள் போஜனம் முடித்துக்கொண்டு கூடத்தில்வந்தமர, நீலாம்பாள் ஒருதட்டில் வெற்றிலைபாக்குகொண்டுவந்து எதிரில் வைத்தனள். அலமேலம்மாள் தாம்பூல தாரணம் செய்துகொண்டிருக்கும்பொழுதே, வழக்கம்போல அக்கம்பக்கங்களிற் குடியிருக்கும் பாஹி, ஸோனு, மீனு, முதலியவர்கள் மத்தியான காலக்ஷேபத்திற்கு அவ்விடம் வந்து சேர்ந்தனர். இவர்களெல்லாரும் அலமேலம்மாளின் தோழிகள். அவரவர்கள் புருஷன்மார்கள் கச்சேரிபோனவுடன் தங்கள் வேலைகளை மிக துரிதமாக முடித்துக்கொண்டு, இங்கே வந்து தங்கள் காலத்தை பலவகை வம்புகளில் போக்குவார்கள். தெரியாமலா கற்றறிவுடையோர், ஸ்திரீகளுக்குச் சிறிதாகிலும் படிப்புத்தெரிந்திருக்க வேண்டியது அவசியமென்று முட்டிக்கொள்ளுகிறார்கள். கொஞ்சம் எழுத்து வாஸனைதெரிந்தால், மறந்தாகிலும் ஒருவேளை ஏதாவது படிக்கத் தோன்றலாம். அது பூஜ்யமாயிருந்தால், எங்கே வம்பு கிடைக்கும் என்று அலைவதுடன் அதனிமித்தம் பிறர் வீட்டெறி ஸம்பந்தமற்ற பலவார்த்தை சொல்லவும் கேட்கவும் இடமுண்டாகிறது. இந்த ஸபையில்அலமேலம்மாளே சிறிதுவாசிக்கத்தெரிந்தவள். அதனுடன், மற்றவர்களைவிட கொஞ்சம் மேம்பட்ட அந்தஸ்துள்ளவளான படியினால் அவளை மதித்து மற்றவர்களங்கு தினந்தோறும் தடையன்றி வருகிறபடி, அன்றும் வார்த்தையாடிக்கொண்டிருந்தனர்.

ஸோ. என்ன அலமேலு? மாட்டுப்பெண்ணெங்கே காணும்?

அல. ராஜமும் அவளும் மெத்தைக்குச் சென்றார்களோ என்னமோ?

பாஹி. என்னடி! உன்மாட்டுப்பெண் ரொம்ப படிச்சிருக்காளா என்ன? அவளைப்பாத்தா அப்படி தோணறது.

மீனு. ஒத்தரைப்பாத்தாலே படிச்சதும் படிக்காததும் தெரியுமா? பின்னே என்னைவிட நீ தேவலேடியம்மா?

பாஹி. இல்லே. அவபின்னிதொங்கவிட்டுக்கறத்தையும், வெள்ளை ரவிக்கை முழங்கைவரையில் கைவைத்துப் போட்டுக்கறத்தையும் பார்த்தொட்டனே நேக்கு நினைவுவந்தது. கிருஸ்தவப்பள்ளில்

கூடத்திலே படிச்சா, அவாள்ளாம் அப்படித்தான் போட்டுக் கறது வாடிக்கை. அதனாலேதான் கேட்டேன்.

அல. என்னமோ சிறுசு போட்டுக்கொண்டா லென்னவென்று தான் நானும்வெறுமனேயிருக்கேன். அடுத்தாப்பிலே ராஜத்தைபாரு, அவள் பட்டிக்காட்டிலிருப்பவாளாத்து மாட்டுப்பெண். அவாள் ஆக்ஷேபத்திற்குப் பயந்து அவள் சீட்டிரவிக்கையே போட்டுக் கிற தில்லே. என்னமோ, அவாளவாள் கொடுத்து வைச்சது. நீ சொன்னது என் மனஸிலே பட்டது. நான் இதைப்பத்திச் சொன்னா அவள் பெண்ணை புக்காத்துலா படுத்தரா என்று நம்மைப் பார்த்து இப்படிகேட்டாளென்று நினைத்துக்கொள்ளப் போகிறாளோவென்று சொல்லவில்லே.

மீனு. ஏண்டி அவதான் படிச்சிருக்காளே! இதெல்லாம் ஒத்தர் சொல் லித் தெரியணுமா? உடன்பொறந்த நாத்தனார் எடுத்துக் கட்டிக் கல்லியா? தனக்காகத் தெரியாட்டாலும் பொறத்தியாரைப் பார்த்தாகிலும் தெரிஞ்சுக்கவேண்டாமோ! நன்னாருக்கு! நீ பயப்படறது.

பாஹி. இல்லேடி அவ நாகப்பட்டணத்தா. படுகெட்டிக்காரி. நீ வேணா பாத்துண்டேரு. முரளீதரனை எப்படி ஆட்டிவைக் கப் போறாளென்னு. அவன் அப்பாவி, ஒண்ணும் தெரியாது. இன்னமே எல்லாம் கத்துக் கொடுத்துடுவள்.

ஸோ. என்னமோ.. பின்னலிலேருந்து ரவிக்கைலேருந்து பெரிய விஷயத்துக்குப் போயிட்டே. அந்தப் பொண் வந்து இன்னும் பூரா ரெண்டு மாசமாகல்லே. அதுக்குள்ளே அவமாதிரியெல் லாம் நோக்கு தெரிஞ்சுட்டாப்பிலே யிருக்கு.

பாஹி. என்னமோ எனக்குத்தோணினதைச்சொன்னேன். கோவிச் சுக்காதேம்மா. நான் நாலு நாளைக்கி முன்னே ஒருநாள் அல மேலுவைப் பார்க்க வந்தேன். அவள் தோட்டத்தி லிருக்கி றான்னு பரிசாரகன் சொன்னான். வரட்டுமின்னு வாசத்தா வாரத்தில் உட்காந்து நீலாளோடு பேசிக் கொண்டிருந்தேன். ராஜத்தின் ஆம்பிடையான் உள்ளேருந்து நாங்களிருந்தபக்கமாய் வீதிக்குப் போனான். நேக்கு ஆச்சரியமாயிருந்தது! ஓடிப் போய் ஒளிய மாட்டாளோ ஒரு பொம்மனாட்டி? என்ன தைரி யம். அவள் பாட்டுக்கு நின்னுண்டிருந்தா! எங்க நாள்லே நாங்க இப்படி இருந்தா, எங்க மாமியார் நாத்தனார் நிர்த்தூளிப்

படுத்தி விடுவார்கள். நான் நமக்கென்ன சொல்லவேண்டாமென்னுப் பார்த்தேன். என்னமோ பேச்சுப்பலாக்கில் அது வந்தூட்டுது.

ஸோ. இல்லேடி. அவ செல்லமாப் வளந்தவளாம். 'அவாளுக்கு ஒரே பொண்ணென்னே! அதனுலே கண்டிக்காதே இப்படி புருஷனுட்டம் வளந்தூட்டா. இன்னமே அலமேலு ஸரிவர அவளைத் திருத்திக்கொண்டு வந்துடுவள்.

இதற்குள், அந்தப் பெண்மணிகளின் கால்மெட்டி சப்தம் கேட்கவே, பேச்சு வேறு விதமாக மாறிற்று. ஸாயங்காலம் அவர்கள் அலமேலுவிடம் சொல்லிக்கொண்டு தங்களில்லத்தை நோக்கி நடந்தனர். மத்தியானம் நடந்த மேற்கண்ட ஸம்பாஷணைக்குப் பிறகு, அலமேலம்மாள் மனம் ஏதோ கவலையுறத் தொடங்கியது. தானினி இதுவரையில் இருந்தது போலிராமல், சிறிது 'உஷாரா'யிருக்க வேணுமென்று எண்ணினுள். ஆஹா, இதென்ன கஷ்டம்! அலமேலு அம்மாள் குடும்பத்தை சீர்திருத்தும் விஷயத்தில், ஸோனுவும் மீனுவும் ஏன் வீண் கஷ்டமெடுத்துக் கொள்ளவேணும்! நீலாம்பாள் ரவிக்கையை நீளமாய் வைத்துக்கொண்டால் அதனுல் இவர்களுக்கு என்ன பாதகம்? குள்ளமாயிருந்தால் இவர்களுடையும் லாபமென்ன? அவள் படித்தவளாய் இருப்பதனுல் இவர்களவளைக்கண்டு பொருமைப்பட, அவளொரு விதத்திலும் அவர்களுக்கு அபசாரப் பட்டவளல்ல. அவிவேகத்துடன் மாந்தர்கள் பூரணமாய் உறவாடினுல், அவர்கள் நடத்தை சிறு குழந்தைகளும் கண்டு பரிஹஸிக்கும் நிலைமையிலிருக்கும் என்பதை விவரிப்பது அனுவசியம். மனதில் பதினுயிரம் எண்ணங்களிருந்தாலும், உகைத்திற்காகவும், பொற்கொடியாகிய நீலலோசனியின் குணத்திலீடுபட்டும், அலமேலு அம்மாள் இந்த இரண்டு மாதகாலமும் தனது ஸ்வரூபத்தை அடக்கி, நீலாம்பாள் தனது தாயைவிட எண்மடங்கதிகமாய்த் தன்னை எண்ணும்படி நடந்து வந்தாள். இன்று நடந்த ஸம்பாஷணைக்குப் பிறகு, அலமேலம்மாள் மனதில் க்ரோதம் குடிகொள்ள ஆரம்பித்தது. பலவித யோசனைகளுடனிவளிருக்கக் கச்சேரி சென்ற எஜமானர் ஐந்து மணிக்கு வீடுவந்து சேர்ந்தனர். அவரைக்கண்ட மனைவி எழுந்து நிற்க, அவர் 'என்ன விசேஷம்?' என்று கேட்டுக் கொண்டே அருகில் வந்தனர். அவள் 'ஒன்றுமில்லை. உங்களைப் பார்த்தால்தானென்னமோ சொல்லப் போகிறுப்போல் தோணுகிறது' என்றுள். அதற்கவர், "ஏது, நீ ரொம்ப கெட்டிக்காரியாய் விட்டாய்! வாஸ்த

வமாய் நான் சொல்லவேணு மென்றுதான் சீக்கிரம் வந்தேன். சம்பந்தி ஐயரிடத்திருந்து தந்தி வந்திருக்கிறது. நீலாம்பாள் தாயாருக்கு ஏழெட்டு நாளாய் ஜ்வரமாம். ஆதலால் நீலாம்பாளைக் கூட்டியனுப்ப வேணும்'' என்றார்.

அலமேலம்மாள், ''நன்னாருக்கு: ஜ்வரமாயிருந்தால் நாளைக்கே தாவளையாகிறது. ஒவ்வொருதரமும் தலையை வலித்தால் ஓடிப்போய் நிற்க முடியுமா? எனக்கு உடம்பு ஸரியாயில்லை. ராஜத்திற்கு பஹிஷ்டைக்கு நாள். நான் படுபாடாய் விழுந்து விட்டால் வீட்டைக் கவனிப்பவர் யார்? பிராமணப்பிள்ளை கூட, ஊருக்குப் போகவேணுமென்று சொல்லிக் கொண்டிருக்கிறான். நம்ம ஆத்துக்காரியம் இப்படி இருக்கிறது. பிறகு உங்களிஷ்டம், எனக்குத் தெரியாது. நான் சொல்லவேண்டியதைச் சொல்லி விட்டேன்'' என்றாள். இவளித்தனை தூரம் சொன்ன பிறகு, அவர் என்ன செய்வார் பாவம்! ஸரி, அப்புறமதைப்பற்றி யோசிப்போமென்று உடுப்புக் களையச்சென்றார். இந்த ஸம்பாஷணையை பக்கத்தறையில் நின்று கேட்டிருந்த பொற்கொடியாகிய நீலாம்பாள், தனது தாயின் அஸௌக்யத்தினால் மனங்கலங்கியவளாய் அவளையறியாமல் கண்களில் ததும்பிய நீரைத்துடைத்துக்கொண்டு யாராகிலும் பார்த்துவிடப் போகிறார்கள் யென்றெண்ணி, முகத்தை ப்ரஸன்னமாய் வைத்துக்கொண்டு ராஜத்தை நாடிச்சென்றனள்.

ராஜம் நல்ல பெண். உள்ளபடி அவளை புக்ககத்தில் கொஞ்சம் படுத்தினாலும், அவள் வாய்திறந்து ஸமாசாரமிப்படி யென்று பெற்றோரிடம் சொன்னவளல்ல. அவள் புருஷன், எப்.ஏ., கிளாஸில் படிக்கிறான். அவனும் கூடியவரையில் நல்லபையனே. திருச்சியிலேயே கிளப்பில் சாப்பிட்டுக்கொண்டு படித்துவருகிறான். மாமனார் வீட்டிற்கு வாரம் ஒருமுறை ஞாயிற்றுக்கிழமை வந்துபோவான். அலமேலு அம்மாளுக்கு, மாப்பிள்ளை தன் வீட்டோடிருந்துகொண்டிருக்கவில்லையென்று வருத்தம். அவனது பெற்றோர் திருச்சிக்கு ஸமீபத்திலேயே ஐயன்பாளயத்தில் வஸித்து வருகிறார்கள். ஒரு கௌரவமுள்ள குடும்பத்தினர். ஸுமார் முப்பதினாயிரம் வரையில் பூஸ்திதியுள்ளவர்கள். ராஜத்தின் புருஷன் பாலசந்திரன் தவிர, இன்னமிரண்டு குமாரர் அவர்களுக்குண்டு. ஒருவன் மெட்ரிகுலேஷனுக்கும் மற்றவன் மூன்றாவது பாரமும் படித்து வருகிறார்கள். சில அஸந்தர்ப்பங்களால் ஸதிபதிகள் ஊரைவிட்டுப்போக முடியாமல் குழந்தைகளை கிளப்பில் சாப்பிட்டுக்கொண்டு படிக்கும்படி ஏற்பாடு செய்த

னர். தம்பிகளைப்பிரிந்து தான் மாத்திரம் மாமனாரகத்திலிருக்க பால சந்திரன் இஷ்டப்படவில்லை. ஆகையால் மேற்கண்ட ஏற்பாட்டிலிருந்து வந்தான்.

நீலலோசனியை யனுப்பும்படி தந்திவந்த அன்று முதல்நாள், ராஜத்தை வருஷப்பிறப்பிற்கு அனுப்பும்படி அவள் மாமனார் எழுதியிருந்தார். அதனால் ஏற்கெனவே குழப்பத்திலிருந்து வந்த அலமேலம்மாளுக்கு பாலு, மீனாக்ஷி, ஸ்வர்ணம் இவர்கள் ஸம்பாஷணையும் ஸம்பந்தியின் தந்தியும் சேரவே, அவள் அன்றிரவை நிம்மதியற்ற நிலைமையிற் கழித்தனள்.

பெண்ணமுதாகிய நீலாம்பாள் தனது வருத்தத்தைப் பிறரிடம் கூறமுடியாதவளாய், கலங்கின மனதுடன் தன் கட்டழகமைந்த காதலன் படத்தை வழக்கம்போலக் கண்களிலொற்றிக் கவலை நீங்க முத்தமிட்டு, மறுபடி இருப்பிடத்தில் வைத்துப் பூட்டி சயனிக்கச் சென்றாள்.

# பனிரண்டாம் அத்தியாயம்

## அலமேலு அழுலும், நீலாவின் கலக்கமும்

ஒரு நாள் காலையில், பங்கஜ மிகுந்த சிருங்கார உருவமைந்த ஒரு பூங்கொடி, தனக்கெதிரில் இருக்கும் தயிர்ப்பாத்திரத்தில் மத்தை நாட்டி அதிற் சுற்றிய கயிற்றின் நுனிகளை மெல்லிய தனதிருகரங்களும் சிவப்பேறும்படி சுற்றிப்பிடித்துக்கொண்டு, சங்கம் போன்ற கழுத்தில் தரித்த ஒளி பொருந்திய முத்துஸரங்கள் சிக்குற, மலர்க்கரத்திலணிந்த வளையல்கள் ஒலிக்க, அசைந்தசைந்து கடைவதினால், முகத்திலணிந்த கமல ஆபரணங்கள் ஒளி விட்டு விட்டு ஜ்வலிக்க, நெற்றியில் முத்து முத்தாய் வியர்வை யரும்ப, அப்யாஸத்தினால் கைகள் தவறுதலின்றி மாறி மாறிக் கயிற்றையிழுக்க, மனம்வேறுபட்டவளாய் பின்வருமாறு யோசித்தனள்.

"ஆஹா! ஜகதீசா! உமது சித்தத்தின்படி மனிதர்களை என்னென்ன கூத்திற்கெல்லாம் ஆளாக்குகிறீர்! பதினான்கு வயதுவரையில் உலகமே தெரியாமலிருந்த எனக்கு சென்ற சில மாதங்களாய் ஒன்றொன்றாய் விளங்கும்படி செய்கிறீர். மாறா அன்புடைய மாமியாரும் என் கஷ்டதசையினால் சென்ற ஒன்றரை மாதகாலமாய் ஒரு மாதிரியாக இருந்துவருகிறார். அதன் காரணம் என்னவாயிருக்கலாமென்று யோசித்துப் பார்க்கப்பார்க்க ஒன்றும் புரியவில்லை. சாந்திகல்யாணங்கழித்துப் போனபிறகு வாரமிருகடிதம் வீட்டிற்கு எழுதிவந்த என் கண்ணாளனிடமிருந்து, கடந்த இரண்டு வாரமாக ஒரு செய்தியும் தெரியவில்லை. என்ன அசௌகர்யமோ, அல்லது உடம்புதான் ஏதாகிலும் ஸுகமில்லையோ ஒன்றும் புரியவில்லை. என் பாடுதான் இப்படியென்றால், ராஜத்தின் விதி என்னிலும் கேடாயிருக்கிறது. போனபிள்ளை, வீட்டில் சொல்லிக்கொண்டு போகக் கூடாதா? பெற்றோர்களை இவ்விதம் தவிக்கவிட்டு, மனைவியிடத்திலும் கூறாமல் மறுதேசம் போய்விட்டானே! பாவம்! தாய் தந்தையர் எவ்வளவோ மறுத்துரைத்தும், தாய் வீட்டிலிருந்தால் உலகம் பழிக்குமென்று, ஒரே பிடிவாதமாய் புருஷன் வீடுசென்று ஸகலவித கஷ்டங்களுக்கும் ஆளாக இருந்துவருகிறாளே! முந்தாநாள் ஐயன்பாளையத்திலிருந்து வந்த மதுரம் சொன்னதைக் கேட்கும்போது என்ன வருத்தமாயிருந்தது! ராஜத்தின் துர்அதிர்ஷ்டத்தினால் அவன் ஓடிப்

போனதாக வல்லவோ அவளையவர்கள் நிந்திப்பதாய் சொன்னாள். இப்படிப்பட்ட அபவாதத்தை அந்தச் சிறுபெண் எவ்விதம் ஸஹிப்பாள். கண்ட்ராவி, ஏதோ சிறிது நல்ல சரித்திரங்களைப் படித்தும் கேட்டும் ஆதிமுதலே நல்ல ஸகவாஸத்திலிருந்து கொண்டும் வந்தபடியினால் இப்பெண்மணிக்கு இந்தப்பொறுமை இவ்வயதில் வந்திருக்கிறது. அவளை, நினைந்தாகிலும் நாம் நம்மைப்பற்றி வருந்தப்படாமல் இருக்கவேண்டாமா? இதனால்தான் சித்தியம்மாளுக்கும் மனங்கலங்கியிருக்கிறது; சில ஸமயங்களில் ஏதாகிலும் சுடச்சுடச் சொல்லுகிறார்கள். நாமென்னசெய்வேன்! எவ்விதம் உகைத்தில் மனச்சாக்ஷிக்கு விரோதமின்றி நடந்து நல்லவளென்று பெயர்வாங்கப் போகிறேன்! தந்தையின் வார்த்தை ஒன்று நினைவுவருகிறது. அம்மா, நாலு பேர் சேர்ந்திருக்கும் இடத்தில் ஏதாவது கலகம் நேர்ந்து வார்த்தை அதிகரித்தால் நீ ஒன்றும் பேசாதே. அதுதான் புத்திசாலிகளுக்கு லக்ஷணமென்பார். புத்தியென்பது சிறிதாவது யிருந்தா லதின்படி நடக்கலாம். ஈசா என்மீது கருணைகூறவேண்டும். ஏதுமறியாப் பேதையாகிய நான் எவ்விதம்—” என்று சிந்தித்துக்கொண்டிருக்கும் பொழுது, ‘நீலலோசனி’ என்று அழைத்த சத்தங்கேட்டு எழுந்து “ஏன் இதோ வந்தேன்” என்றோடினாள்.

அல. அங்கே என்ன பண்ணுறே? சமையலுக்கு கரிகாய் நறுக்கிக் கொடுக்கவேண்டாமா?

நீலா. வெய்யலேறினால் வெண்ணெய் உருகிப்போய்விடுமோ, என்ன மோரென்று தயிர் கடைந்தேன். இதோ நறுக்கிக்கொடுக்கிறேன்.

அல. தயிர்கடைந்தால் கச்சேரிக்குப்போகிற புருஷனுக்கு சமையலாகுமா? பின்னே செய்கிறகாரியம் பின்னே செய்யவேண்டாமா? இதெல்லாம் ஒருத்தர் தினம் சொல்லவேணும்.

நீலா. பிசகுதான். ஏதோ ஞாபகத்தப்பாய்த் தயிர் கடைய உட்கார்ந்துவிட்டேன். என்ன சமையல்?

அல. ஆமா, இதெல்லாம் ஞாபகமிருக்குமா? நாலு நாளைக்கொருதடவை கதவைச் சாத்திக்கொண்டு கடுதாசி எழுதுவதற்கென்றால் மறந்துபோகாது. எதுஎப்படிப்போனால் நமக்கென்னவென்றால் ஊரிலிருப்பவர்கள் என்னைத்தானே சொல்லுகிறார்கள். குட்டிச் சுவராட்டம் வயஸாச்சு; சிறுசுக்குச் சொல்லிக்கொடுக்க வேண்

டாபா வென்று, சொன்னல் உனக்குப் பொல்லாதவள். சொல்லாவிட்டால் ஊராருக்குப்பொல்லாதவள். இந்தக் கஷ்டத்திற்கு என்ன செய்கிறது. ஆரும்படிக்காத படிப்பு அதிசயமாய் நீ என்ன படித்துவிட்டது? அப்படியே யிருந்தாலும் இப்படி நாலுபேர் சிரிக்க ஒரு காரிய முண்டோ? இரவிக்கை புடைவையில் கூடவா இதைவெளியிடவேணும்? எல்லாரையும்போல அதைத் தூக்கி சொருகிக்கொண்டு பேருக்கு ரவிக்கை போட்டுக் கொள்ளப்படாதா? நேத்து பாஹி சொன்னேனே நோக்கு காது கேட்கல்லையா? நீலாம்பா எப்பபார்த்தாலும் வாசிக்கிறள் என்று. ஏதாவது காரியமிருந்தால் செய்கிறது. இல்லாவிட்டால் இந்தமாதிரி வாசிக்கிறதென்று அர்த்தமா? அப்படியே போது போகாட்டா சொப்பி கட்டாறதுவா, இல்லாட்டா ரவிக்கை கிழிச்சு தைப்பா, ஒண்ணு மில்லாட்டா ஒழிச்சு வைச்சுப் பெருக்கித்தள்ளி ஒட்டடை அடிச்சு பிரயோஜனமுள்ள காரியமா பண்ணுவா. நானும் சொல்லப்படாது, சொல்லப்படாதென்று பார்த்தா எனக்கும் பொறுக்கமுடியவில்லை. ஒரு வாயில்லா குழந்தை ராஜத்தைப்பாரு. அவள் என்பெண்ணுன்னு சொல்லல்லே. அவள் ஊரிலிருந்து வராவிட்டால் சொல்லாது உன் காதிலே படல்லையா? பெண்ணென்று பிறந்தா அப்படியன்றோ பெயரெடுக்கணும். என்னமாய் நடந்தாலென்ன? அவள் பொறுமை தலைக்கூடவில்லையே.

என்று தலையில் இரண்டடி அடித்துக்கொண்டு ஹோ வென்று கதறினுள். இவருளரையைக் கவனித்து சித்திரைப் பிரதிமைபோல் தலைகுனிந்து நின்றிருந்த தத்தைமொழியினுள், பாதிதலையிலடித்துக் கொண்ட ஓசை கேட்டவுடன் தூக்கிப்போட்டவளாய் நிமிர்ந்து பார்த்து மறுமுறை யவளப்படி அடித்துக்கொள்ளா விதமாய் அவளது கரங்களைப் பற்றிக்கொண்டு ஒன்றும் சொல்லத்தெரியாமல்; ‘அம்மா! அம்மா’ வென்றுள். அலமேலு, நீலாவின் கரத்திலின்று கையைப்பிரித்து தூணேடுசார்ந்து உட்கார்ந்துகொண்டு துக்கப்பட ஆரம்பித்துவிட்டாள்.

பத்மலோசனியாகிய நீலாம்பிகை பெருங்காற்றிலலைவுறும் சருகு போன்ற மனத்தினளாய் மாமியாரை நமஸ்கரித்து ‘அம்மா! சின்னவளாகிய நான் தப்புசெய்தால் உங்களைத்தவிர ஆர் சொல்லிக்கொடுப்பார்கள்? படிப்பதனுல் பிறர் தப்பபிப்ராயப்படுவார்களென்று எனக்கு

இதுவரையில் தெரியாது. இதற்காக நீங்கள் இனி வருத்தப்பட வேண்டாம். நானினி படிக்கவில்லை. புடவை, ரவிக்கை, விஷயத்திலும் இனி கவனத்துடன் நடந்துகொள்ளுகிறேன். பாவம்! ராஜத்தைப்பற்றி எண்ணினால் எனக்கு என்னையறியாமல் வருத்தமாகயிருக்கிறது. அவர் பொறுமைக்கு ஸ்வாமி சீக்கிரம் கண்ணைத் திறந்து பார்ப்பார். நீங்கள் வருத்தப்படாதேயுங்கள். மாமனார் ஸ்நானத்திற்கு வரவேளையாய் விட்டது என்றாள்.

அல. ஆமாடி நீ சொல்லமாட்டாயோ? பின்னே உனக்கு வாயும் வலதுமிருக்கு நீ சொல்றே. நாளை உன் ஆம்படையான் வருவான் ஊருக்கொசத்தியாய் உன்னை யழைச்சுண்டு போவான். என் குழந்தைக்கி என்ன ஆச்சு? கட்டிக்கொண்ட தடியன் சொல்லிக்காதே ஓடிப்போய் விட்டான். வெட்டிக்கி மாடுபோல உழைத்துக்கொண்டு பிண்டத்துக்கு திண்டாடிக் கொண்டிருக்கிறாள். இதை நினைச்சா என்வயிறு பத்தறதே! அப்பவே சொன்னேனே இந்தப் பாழும் பிராமணனுக்கு. கிளைக்கிளே கன்னுகிறாப்போலே படிச்ச பிள்ளை என்று ஏமாந்து தள்ளாதே என்று! ஒருவார்த்தை கேட்டானோ? வெங்கிட்டு பிள்ளைக்கி கொடுத்திருந்தா, இந்த இழவெல்லாம் இல்லாமல் காலை சுத்திக்கொண்டு கிடக்குமே? பணம்பணம் படிப்பு படிப்பென்று கலைமாட்டுக்கொள்ளியாய் வைச்சு கொண்டாச்சு. வர வேகெட்டெல்லாம் படிப்பினாலேதானே.

என்று அகங்காரத்துடன் கூறிவிட்டு, இடதுகையைத் தலைக்குயரம் வைத்துக்கொண்டு முந்தானையால் முகத்தைமூடிப் படுத்து விட்டாள். இவள் பிரஸங்கத்தைக்கேட்டு ஸ்தம்பம்போல நின்றிருந்த அக்கோமளாங்கி, இனி தான் வாய்திறத்தல் பிசகென்றெண்ணி கலங்கினமனதுடன் சமையலறை நோக்கிச் சென்றாள்.

இதென்னபரிதாபம்! வெளுத்ததெல்லாம் பாலென்றெண்ணும் பெண்மணியாகிய கண்மணியின் கதியைப் பாருங்கள்! அலமேலு அம்மாள் அபிப்ராயத்தில் உலகத்தில் ஸாதாரணமாய் படிப்பினால் அகங்காரமும் அவமதிப்பும் உற்பத்தியாகிறதென்று இவ்வளவு ஸூக்ஷ்மமாய் அதைக் கண்டுபிடித்த அவ்வம்மணிக்கு சிறிது படித்த நாமெல்லோரும் அபராதிகளே. அவளை ஆராகிலும் உனக்குக் கூட படிக்கத் தெரியும் போலேயிருக்கே என்றால் ' ஆமா. ஏதாகிலும் வேணுமே ஜன்மத்துக்கு, என்னமோ ராமாயணமென்

கிறு, பாரதமென்கிறு போதுபோகாதபோது ரெண்டெழுத்து வாசிக்கலாமோ இல்லையோ, அதுக்காகத்தான் வேறென்ன?' என்பாள். அந்த வார்த்தை மற்றவர்களுக்குச் செல்லாது.

வெங்கிட்டு, அலமேலம்மாள் மருமான் (மருமகன்), நிரக்ஷரகுக்ஷி. அவனுக்கு ராஜத்தைக் கொடுக்கவேணுமென்று ஆனபாடும் பட்டாள். அது நடந்தேறவில்லை. படிப்பினுல் அறிவு விசாலப்படுமென்பதை எவ்விதமாய் வாதித்தாலும் அலமேலம்மாள் ஒப்புக்கொள்ளமாட்டாள். ஆகையாலதிகம் பேசுவதிற் பிரயோசனமில்லை.

## பதின்மூன்றும் அத்தியாயம்

### மெய்யன்பின் தன்மையும், அன்பனின் வருகையும்

இரவு பத்தரைமணி ஸுமாருக்கு ஒருவிசாலமான வீட்டினுடைய முன்பாகத்திலுள்ள ஓரறையில் சேர்த்துப் போட்டிருந்த இரண்டு பெஞ்சின்மீது ஒரு ஜமக்காளம் விரித்து தலையணை ஒன்று வைக்கப் பட்டிருந்தது. ஒரு சிறிய மேசையும், அதற்கருகில் ஒரு நாற்காலியும் போடப் பட்டிருந்தன. மேஜை மீது ஒரு மண்ணெண்ணெய் விளக்கு மந்தமாக எரிந்து கொண்டிருந்தது. அது பட்டணவாஸமல்லாத படியினால், அஸ்தமித்தவுடனேயே அநேகமாய் ஊராரவம் அடங்கிப்போய் விட்டது. எட்டடித்தவுடன் நிச்சப்தமாயிருந்தது. ஆகையால் அப்பொழுது மேற்கூறிய அறையில் நாற்காலியில் உட்கார்ந்து நாட்பட்ட விஷயங்களைச் சிந்தித்திருந்த நாரீமணியைத் தவிர, மற்றவர்களெல்லாரும் கும்பகர்ணனுடன் போட்டி போடுகிறவர்களாகவே காணப்பட்டார்கள். அம்மாதரசி, மனதில் மன்றும் சிந்தனையி லீடுபட்டவளாய் யாதும் செயலற்று வெகு நேரம் ஒரே நிலையிலிருந்தாள். பிறகு சற்று வாய்திறந்து, ''ஹா ஹா! என்ன ஜன்மம். என்னைப் போலொரு பெண்ணுருவம் இல்லாமல் உலகில் எந்த இடம் பாழாய்க் கிடந்தது! இப்படிப் பிரயோஜனமில்லாத பிராணிகளை, ஈசன் ஏனோ சிருஷ்டிக்கவேணும்? மண்ணில்மாந்தரெனப் பிறந்தோர்க்குக் கஷ்டஸுகம் ஸகஜமேயானாலும், என்னைப்போலொரு துரதிர்ஷ்டப் பிராணி இராளென்பது நிச்சயம். எந்தக் கஷ்டம் வந்தாலும், அதற்கு ஒரு முடிவுண்டு. ஆளனுடைய அருவருப்புக்குப் பாத்ரையானதற்கு முடிவு ஏது? ஐயோ! என்ன மூடமதி? நான் வாய் கூசாமல் அவர்மீது இவ்வண்ணம் அவதூறு கூறுகிறேனே! என் நாதன் என்னைப் பிரியும் வரையில் எந்த விதத்தில் என்னிடம் வெறுப்பைக் காட்டினார்? இல்லையே. ஒரு விதத்திலும் குறை சொல்லுவதற்கு இடமில்லாமல் தானேயிருந்து வந்தார். எங்கே போனாலும், எனது மாங்கல்ய பலத்தினால் எவ்விதமும் வந்து சேருவாரென்று நம்பிக்கை யிருந்தாலும் இன்ன இடத்திற்குப் போகிறேன், இந்தக் காரியத்தை முன்னிட்டுப் போகிறேன் என்று சொல்லாமல் போய் விட்டாரே! என் பெற்றோர்கள் ஏதாகிலும் அவர் விஷயத்தில் தாறுமாறான

எண்ணங்கொண்டாலும், நான் அவைகளைக் கவனிக்காமல் ஈச்வரனைப் பூஜிப்பதைப் போலவல்லவோ பூஜித்து வந்தேன். முடிவில் உலகோர் என்னையல்லவோ மூதேவி என்றும் நாசகாலி என்றும் ஸம்பந்தப்படி சொல்லுகிறார்கள்? ஆனால் அதில் என்ன தப்பிருக்கிறது? நான் வீட்டிற்குவந்து பூராவாக ஒரு வருஷமாவதற்குள், என தன்பன் அகத்தை விட்டுநீங்கிப் போய்விட்டாரல்லவா? போனால் தான் என்ன? ஒருகடிதமாவது எழுதப் படாதா? இருக்கிற இடமே தெரியவில்லையே! இதெல்லாம் என் பாவம்தானே! இதில் பிறர் கூறுவதைப்பற்றி துக்கிக்க என்ன இருக்கிறது?" என்று தனக்குள்ளே மெதுவாய்ச் சொல்லிக்கொண்டாள். இதற்கிடையில் தெருவில் வண்டி சத்தங் கேட்க, அப்பெண்மணியின் மனம் அவ்வோசையைக் கவனித்தது. வந்த வண்டி இவர்கள் வீட்டெதிரில் நிற்க, சிறிது போதிற்கெல்லாம் கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. பெண்மணி என்ன செய்வாள்? மணியோ பதினொன்று! வீட்டிலோ ஒருவருமில்லை! துணைக்கு ஒரு வேலைக்காரி மாத்திரமிருக்கிறாள். அவளும் நித்திரை செய்கிறாள். தட்டுகிற சப்தம் வரவர அதிகரிக்கிறது. இப்பூங்கொடிக்கு, நகசிகை பரியந்தம் 'விட விட' வென்று நடுக்க வாரம்பித்தது. மெதுவாக, உறங்கும் அப்பணி செய்பவளை நெருங்கி, கையிலிருந்த புஸ்தகத்தால் தட்டி எழுப்பி, "லக்ஷ்மி, ஏதோ வண்டி வந்து நின்றது. ஆரோ கதவைத் தட்டுகிறார்கள்! எனக்குப் பயமாக இருக்கிறது. நீ மெள்ள ஆரென்று கேளு: பிறகு தாள் திறக்கலா" மென்றாள். அவள் கதவருகில் சென்று நின்று, பயத்தினால், சப்தம் வெளிவராமல் அடைத்துக் கொள்ளும் தொண்டையை சீர் திருத்திக்கொண்டு "ஆரங்கே"? என்றனள். அதற்கு "கதவைத் திற" என்று பதில்வந்தது. "சொன்னால்தான் திறப்பேன் என, நீ திறந்தால் சொல்லுகிறேன்." என பதில்கேட்டது. இந்தக் குரலைக் கேட்ட ராஜம் "லக்ஷ்மி"! கதவைத் திற; ஏதோ கேட்ட குரல் மாதிரி இருக்கிறது" என்றனள். அவளுமப்படியே திறக்கக் கட்டழகமைந்த காளை யொருவன் கையிற் பிடித்த பையுடன் உள் நுழைந்தனன். கண்டாள் மாது! அவள் கொண்ட கவலையெல்லாம் பறக்க ஆனந்த மேலிட்டதால் அறிவுமயங்கி "ஹா நாதா!" வென்றலறிச் சோர்ந்தனள். இக்காட்சியைக் கண்ணுற்ற விளங்குமரன் தனது கரங்களிலவளைத் தாங்கிக்கொண்டு லக்ஷ்மியின் உதவியினால் அவளைக் களை தெளியச் செய்து, "ராஜம்! வந்ததும் வாராததுமாய் என் உத்தியோகத்தைப் பரீக்ஷித்து விட்டாயே! கண்ணே, உன்

உடம்பு ஏன் இப்படி மெலிந்திருக்கிறது? அப்பா அம்மா எங்கே? வீட்டில் ஒருவருமில்லை போலிருக்கிறதே! எங்கே போயிருக்கிறார்கள்? ஏன் உன்னையழைத்துப் போகவில்லை? என்ன ஒன்றும் பேசவில்லை? என்மீது கோபமா என்ன? சொல்லாமல் போய்விட்டேனென்றா கோபம்?" என்று அவளை அணைத்து முத்தமிட, வெகு நாளாய் மனதிலடக்கிவைத்த துக்கம் பொங்கி வர, ராஜம் மிக ஆவலுடனவன் கழுத்தைத் தனது கைகளால் கட்டிக்கொண்டு சிறிய குழந்தையைப்போல விம்மி விம்மி அழத் தொடங்கினாள். இந்தப் பரிதாபம் காண சகியாத பாலசந்திரன் "கண்ணே, இதென்ன புத்திசாலியாகிய நீ கூட இப்படி வருத்தப்படுகிறாய்? உன் விஷயத்தில் நான் எவ்வளவு அன்புள்ளவனென்பதை நீ அறியமாட்டாயா? நான் பி. ஏ., பரீக்ஷை ராஜதானியில் முதலாகப் பாஸ் செய்ததற்காக எனக்கு ராஜாங்கத்தார் உபகாரச் சம்பளம் கொடுத்தது உனக்குத் தெரிந்திருக்கலாமே! அம்மாவுடன் சொன்னால் தடுத்து விடுவார். எனக்கோ டப்பாய்ப் போய் அங்கு டாக்டர் பரீக்ஷை பாஸ் செய்யவேணுமென்று ஆவல் அதிகமாக இருந்தபடியினால், சிறிது கஷ்டத்தைப் பாராட்டாமல் திடீரென்று புறப்பட்டுப் போய்விட்டேன். சென்ற மாதக் கடைசியுடன் படிப்பு முடிந்து அதில் தேறி இருப்பதாக ஸமாசாரமும் தெரிந்தது. அவ்விடங்களில் ஸமீபத்திலுள்ள ஊர்களைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு இன்று மத்தியானம் திருச்சிவந்தேன். நீ அங்கிருக்க மாட்டாயென்று எனக்குத் தோன்றியபடியால் உடனே புறப்பட்டு வந்துவிட்டேன். வண்டி நடுவில் கொஞ்சம் தாமதப்பட்டதா லிவ்வளவு நேரமாயிற்று" என்றனன்.

ராஜம்.—நாதா! தாங்கள் சொல்வதைப் பார்க்க லொன்றும் ஆகாரம் செய்யவில்லை போலிருக்கிறதே.

பால.—ஆம். இப்பொழுது அகாலமாய்ப் போய்விட்டதே. இனிமே லென்ன செய்கிறது: மணிபனிரெண் டடிக்கப்போகிறது.

ராஜம்.—ஆனாலென்ன? நான்கூட, இரவு சாப்பிடவில்லை. வேண்டியிருந்தால் பிறகு சாப்பிடலாமென்று, பாலை புரைகுத்தாமல் தணலில்வைத்து மூடினேன். என்னமோ உட்கார்ந்து யோசித்துக்கொண்டிருந்தேன். நாழிகையானதே தெரியவில்லை. அதற்குள் தாங்களும் வந்துவிட்டீர்கள். ஆகையாலதை இருவரும் உட்கொள்ளலாம்.

பால.—பார்த்தாயா: இப்படி சாப்பிடாமலிருந்து உடம்பை உருகிப் போகும்படி செய்துவிட்டாயே! முன்னிருந்ததில் கால் உடம்பு கூடயில்லையே. இடறிவிழுந்தால் பிராணன் போய்விடும்போல மிக துர்ப்பலமாயிருக்கிறாயே? இப்படியும் செய்துகொள்வார்களா? என்ன முட்டாள் தனம்!

ராஜம்.—இளைத்தாலென்ன? இனி நன்றால் பெருத்துவிடும். இல்லையேல் டாக்டரவர்கள்தானிருக்கிறீர்கள். மருந்து கொடுத்தாலெல்லாம் ஸரியாய்ப் போய்விடுகிறது,

என்றுரைத்து, லக்ஷ்மியைத் துணைக்கழைத்துப்போய் பாலையெடுத்து வந்து தன்நாதனுக்களித்துத் தானும் பருகினாள். பிறகு மாமனார் மாமியார் பதினைந்து நாளாய் ஊரிலில்லையென்றும் சிதம்பரத்திற்கு ஸ்வாமி தரிசனத்திற்குப் போயிருப்பதாகவும், தனக்கு உடம்பு சிறிது அசௌக்கியமாயிருந்தபடியினாலும் வீட்டிலாருமில்லாதபடியினாலும் தன்னை, துணைக்கு லக்ஷ்மியுடன், வீட்டைப் பார்த்துக்கொள்ளும்படி வைத்துப்போனார்களென்றுமுரைத்தனள். மணி 'டங்' என்று ஒன்றடித்தது. பாலசந்திரன், "கண்ணே! சற்று கண்ணயர்வோம் வா, ரொம்பவும் நேரமாயிற்று" என அவளும், இவ்வளவுநாள் கட்டிப்போட்டிருந்த மெத்தையை நன்றாய்த்தட்டி விரித்தனள். நேசமுள்ள அத்தம்பதிகள் நிச்சிந்தையாக அப்பள்ளியில் அமர்ந்தனர். நமது பொறுமையுள்ள ராஜத்தின் கண்ணீர் அன்றைய தினம் தலையணையை நனைத்ததாகத் தெரியவில்லை. ஆகையாலவளது கஷ்டமும் துக்கமும் ஒருங்கே அன்று தொலைந்தது என்று எண்ணலாம்.

"பொறுத்தார் பூமியாள்வாரெ"ன்னும் முதியோர் வசனம் ஒருபோதும் பொய்யாகாதல்லவா? இதற்கு, நமது ராஜம் ஒரு சாக்ஷி.

# பதினுன்காம் அத்தியாயம்

## அம்பாள் தரிசன வைபவமும், வீண் டம்பத்தின் பலனும்

ஒரு சிறந்த சுக்கிரவாரத்தன்று தீனதயாபரியாகிய அகிலாண்டேச்வரி ஸன்னிதியில் அடுக்கடுக்காய் அநேக ஆயிரம் தீபங்கள் அலங்காரமாய் ஏற்றப்பட்டு, ஆலயமெங்கும் ஒரே ஜோதிமயமாய் விளங்கிற்று. தூரத்திலிருந்தே அவ்வற்புதக் காட்சியை நோக்கிக் கொண்டு அதனுல் களிப்படைந்த மனதுடன் உட்சென்று அருட்பெருஞ்ஜோதியாகிய அம்பிகையை நெருங்கினுலோ, ஹா ! ஹா ! என்ன சொல்வேன் அவ்வானந்தத் தோற்றத்தை! கருணுரஸம் பொழியும் அக்காத்யாயனியின் கமலத்திருமுகத்தில் பளீர் என்று ஒளிவீசும் திலகத்தினழகையும் மற்றும் அவ்வமரர்குல நாயகியாகிய அம்மணியின் அங்கங்களில் அந்தமிகுந்த ஸௌந்தரமுடைய அநேக அருமையான ஆபரணங்கள் அங்கங்கே அழகுபெற அமைந்திருக்கும் அதிஅற்புதமான அலங்காரக் காட்சியையும் ஒருகால் நோக்கியவர்களுடைய மனம் பிறிதொருவிஷயத்தில் எவ்வாறு செல்லக் கூடும் ?

நிற்க, பராசக்தியாகிய பவானியைப் பார்த்தானந்தங்கொண்ட பக்தகோடிகள் பரவசமடைந்து அப்பகவதியின் பக்தியிலீடுபட்டவர்களாய், கர்ணும்ருதமான ச்லோகங்களை கானரூபமாக இசைத்துப் பாட்டுப்பாட அற்புத மனேசக்திவாய்ந்தவர்களாய் அன்புமேலிட்டு அன்னையின் ஸன்னிதியில் தன்னை மறந்தாடுமதிசயத்தையும், வீட்டிலுள்ள வெறுப்பினுல் வேதநாயகியை தரிசித்துவருவதாகக் கூறிவந்த வேதியர்குலத்தைச்சேர்ந்த ஸாது சிரோமணிகள் எனும் தோற்றமுள்ள புருஷனையிழந்த பூங்கொடிகள், சிலர் ஒருங்கே கூட்டங்கூடி பலர் வீட்டுவிஷயங்களைப் பக்குவமாகப் பேசும் விந்தையையும், காமனது தேவியோ என கண்டோரதிசயங் கொள்ளும்படி உசிதமாகிய ஆடையாபரணங்களால் தங்களை யலங்கரித்துக் காலிலிட்ட சதங்கை ஒலிக்க, அன்னத்தின் நடையைப் பின்னிடச்செய்வதாக எண்ணியமனதுடன், கன்னியவான்கள் பலரைக் கண்ணியில் மாட்டப்பண்ணும் தந்திரோபாயங்களைச் சிந்தித்திருக்கும் வஞ்சிகளையும்; ஜகதம்பிகையின் திருவுருவை தரிசிக்கும் அபேக்ஷமிகுந்து தனதாருயிர்த்துணைவனுடன் அவ்விடத்துற்ற குலக் கொடிகள் கூட்டத்தின் மும்முறத்

தைக்கண்டு கூசியவர்களாய் தாஸரக்ஷகியை எப்படி அணுகி ஸேவிக்கப்போகிறோமென்று மனது கலங்கி நிற்கும் மான் விழிகளையுடைய மங்கையர்களையும், உலகில் உடம்பை உழைத்துச் செய்யப் பலவேலைகளிருக்க, அவைகளை உபயோகமற்றவையெனத் தள்ளி, "யார்கழுத்திலிருப்பதைக்கத்தரிப்போம், எவர்காதிலுள்ளதை அறுப்போ"மென்று வெகு ச்ரத்தையாய் ஸமயம் பார்த்துக்கொண்டு பதுங்கி நின்று பசபசவென்று விழித்துப் பக்குவமான காலத்தைப் பார்த்திருப்பவர்களையும், கையிலிரண்டு காசுடன் தேகத்தில் சிறிது வலிவும் இருக்கவே, போதுபோக்காக அவ்விடம் வந்து பலரும் கடந்து செல்லும் பாதையில்நின்று, பாங்கர்களுடன்பலபரிஹாஸவார்த்தைகளுரைத்து பாவையர் பலரையும் பரீக்ஷை செய்யும் பாவிகளையும், பலவிதமான துக்கங்களை யனுபவித்து அதனால் மனமுடைந்து யாதொரு விஷயத்திலும் மனப்பற்றில்லாமல் அகிலாண்டேசுவரியே தமக்காதரவென்றெண்ணி யாரோடும் சேராமல் அம்பாளருளை அகத்திலெண்ணி ஆர்வமையுடன் அவளை பிரதக்ஷண நமஸ்காரம் புரிபவர்களையும் ஊன்றிப் பார்த்துச் செல்பவர்களுக்கு உலக ஸமாசாரங்களை ஒருவிதமா யறிவதற்குப் போதுமான ஸமயமதுவே என்று தோன்றக்கூடியதாயிருந்தது.

அப்பொழுது அவ்வாலயத்தின் ப்ராகாரத்தில் ஒரு தூணருகில் அரம்பையர் மெச்சும் அழகைப்படைத்த அணங்கொருத்தி ஆலைத்துரும்பென அலையும் மனதுடன் அயர்ந்து நின்றிருந்தனள். அலர்ந்த தாமரைபோன்ற அவளதழகிய முகமோ, சிறிது வாட்டமடைந்து அவ்விளங் கொடியின் மனக்கவலையை யறிவித்தது. அப்பெண்மணி, அம்பாளை நோக்கி "ஹே தேவி! லோகஜனனி! சிறு பிராயமுதல் உனது திருவடித்தாமரையை ஆதரவென்றெண்ணி யிருக்கும் அடியாளை நீ இவ்விதம் சோதித்தல் நியாயமா! பராசக்தியாகிய உனது திருவுளத்தில் நினைந்தால், ஏழையின் குறையை நிவர்த்தி செய்தல் கூடாதா? பொறுத்தார்க்கு இப்புவியில் ஒருவிதத்தாழ்வும் உண்டாகாதென்னும் நம்பிக்கைபற்றியே எவ்வளவோ ஸங்கடங்களை மனங்கோணாமல் ஸகித்து வந்தாலும், அபலையாகிய எனக்குச் சிலவேளை தாங்கொணாத் துயரம் உண்டாகிறதே. ஹே, கல்யாணி! சற்று கடைக்கண்ணால் கடாக்ஷித்து என் கவலையை மாற்றாயா? வாயினால் கண்டபடி பித்தங்கொண்டவளைப் போலப் பிதற்றுவதில் யாது பயன்? உள்ளபடி உருகி உள்ளன்புடன் பிரார்த்தித்தாலல்லவோ

உன் கருணைக்கு பாத்ரையாவேன். என்செய்வேன் தாயே!" என்று கண்ணீர் பெருக பக்தரக்ஷகியை தரிசித்துப் பின்னும்

" கல்யாண ரூபியே கணமும் உன் பால் மனதைக்
கனிந்துருகி நிறுத்த அறியேன்.
பக்தகோடிகள் கண்டு பரவசம் கொள்ளுமுன்
பாதத்தில் பணிந்தறியேன்.
பலவிதப் புஷ்பங்களால் பக்தியுடனர்ச்சிக்கும்
பாங்கதனை நானறியேன்
பாடிப்புகழ்ந்துன்னை பரமசுகம் பெறவே
பலமார்க்கங்களில் ஒன்றறியேன்.
வேதமந்திரங்களால் ஓதித்துதிப்பதற்கு
ஏதும் வகை நானறியேன்.
மனவிருள் நீக்குகின்ற மகாதேவி உந்தனுட
மகிமையிற் சிறிது மறியேன்.
எந்த விதந்தனிலுன்னை சிந்தை செய்தாலே நீ
மூந்தி அருளளிப்பாய் அறியேன்
சீதமதியணிந்த அந்த ஸ்ரீ கண்டன் தேவியே
சிறியேனை வந்து காப்பாய்."

எனப் பாடி உருகி பக்திமீடுபட்டவளாய் பரவசங்கொண்டு நிற்க, பார்ப்போர், சித்திரம் போன்ற அவ்வுத்தமியை நோக்கித் "தனது கைத்திறமையைக் காட்டவேண்டி, வித்தகனாகிய விதாதா ஒருங்கே அழகெல்லாம் சேர்த்து ஓர் உருவமாக்கினனோ" எனவும் "அஞ்சுகம் போன்ற இவ்வஞ்சியர் திலகம் பிஞ்சுவிடும் பிராயமாகிய இக்கொஞ்சவயதில் மிஞ்சிய பக்தியுள்ளவளாகக் காணப்படுகிறாள்" ளென்றும், அவரவர்களுக்குத் தோன்றியதை உரையாடிக்கொண்டு போயினர். அச்சமயத்தில் ஸன்னிதானத்தை நெருங்கி இருந்த அக் கூட்டமத்தியில் "கொள்ளை! கொள்ளை!! பிடி! பிடி!" என்று பெருஞ் சத்தம் உண்டாயிற்று. ஜனங்கள் சிதறுண்டு ஒருவர்மே லொருவர் விழுந்து நாற்புறமும் தேடலானார்கள். இவைகளைக் கண்ட நீலலோ சனி, நடுநடுங்கினவளாய்த் தானிருந்த இடத்தை விட்டு ஒரு பக்க மாய் ஒதுங்கி நின்றனள். அவளருகில் பணிசெய்பவள் பயந்து ஒண் டிக்கொண்டு நின்றிருந்தனள். ஸமாசாரம் யாதென்றறியாமல் யாரையோ எதிர்பார்ப்பவர்களைப்போல அவர்கள் தத்தளிக்கும் மனதுடனிருக்க, வரவர கூச்சல் மிகுதியாயிற்றே ஒழிய குறைந்த பாடில்லை. இக்கூட்டத்தின் மத்தியிலிருந்து அலமேலு அம்மாள் ஐயோ, ஐயோ வென்று கதறிக்கொண்டு வருவதைக்கண்ட பெண்

மணி பதறியமனதுடன் எதிரில்சென்று, அவளைக் கைகளால் மெது வாகப்பிடித்து "ஐயோ! உங்களுக்கு என்ன நேர்ந்து விட்டது? கும்பலில் நெருக்கித்தள்ளிவிட்டார்களா? கீழேவிழுந்துவிட்டீர்களா? என்ன?எங்கேயாகிலும் அடிபட்டு ரத்தம்வருகிறதா? இப்படிவேணு மானால் சற்று உட்காருவோமா?" எனத் தவிப்புடன்கூற, அவள் "அடி, தோசிப்பிணமே, காலம்பர உன்மூஞ்சியில் முழிச்சபோதே இன்னிக்கி ஏதோ இருக்கென்னு நெனேச்சுண்டேன். அப்படியே ஆச்சே! கீழேவிழுந்தா, ரண்டுநாள் மருந்துபோட்டா சரியாய்ப் போறது. முள்ளங்கிபத்தைபோல இரண்டாயிரத் தன்னூறு ரூபாய் கொட்டி வாங்கி னேனே! நல்ல நாளும் அதுவுமாய் எந்தப்பாவியோ நவரத்ன மாலையை அறுத்துக்கொண்டு போய்விட்டானே! பாழும் தெய்வத்துக்குகூடக் கண்ணில்லையே! அதைக் கிட்டப்போய்ப்பார்க்க வேணுமென்பதற்காகத்தானே அங்கேபோனேன்! கழுத்திலே இருக் கிறதைக் கத்தரிச்சபாவிக்கு கண்ணவியப்பண்ணப்படாதா! நீ, நாச மாய்ப்போக! என்னைத்தொடாதே, விட்டுடு கழுத்திலே இருக்கிற தைத்தான் அறுத்துண்டு போயாச்சே! இன்னம் கட்டீண்டு வேறே அழணுமா?" என்று பின்னும்வாய்க்குவந்தபடி பிதற்றிக்கொண்டிருந் தாள். அம்மாள் ஸாவதானக்குறைச்சலாய்வரவில்லை. கூட ஒன்றுக் கிரண்டாய் வில்லைச்சேவகர்வந்திருந்தார்கள். என்ன இருந்து என்ன? கொண்டுபோனவனுடைய நல்லதிர்ஷ்டத்தினால் அவள் கழுத்தை விட்டு அதுநீங்கும் ஸமயம் வந்துவிட்டது. அதற்கென்று ஸமயம் பார்த்துக்கொண்டிருக்கும் அவன் ஸாமர்த்தியமாய்க்கொண்டு சென் றான். இக்கும்பலில்போய் தரிசனம் செய்வதற்கு அஞ்சியே, நீலாம்பி கை அவளழைத்தபோது தானங்கிருந்தே தரிசிப்பதாயும் கூட்டத் தைப் பார்த்தால் பயமாயிருப்பதாயும் சொல்லி வேலைக்காரியுடன் வெளியே நின்றுவிட்டனள். அலமேலம்மாள் அவளுக்கு பக்தியில்லை யென்று பரிஹாஸம் செய்துவிட்டு பக்கத்திற்கொரு ஸேவகனும் வர தனது படாடோபத்தைப்பலரும் காண, பக்குவமாய் உட்புகுந்தவள் பராக்காயிருக்க,கொடுத்துவைத்தவன் எவனோ அவளது கர்வத்தைக் குலைக்கவெண்ணி அவ்வாபரணத்தைக்கொண்டு சென்றான். இதற் குள் திருடன் பிடிக்கப்போன ஸேவகர்கள் வந்துசேர்ந்தனர். இவ ளது கடுமொழிகளால் சிறிது கண்கலக்கமுற்ற அப்பெண்ணமுதம் மறுபடி அவளை நெருங்கி, "அம்மா, போனதுபோயிற்று, நாமிங் கிருந்து என்ன செய்யப்போகிறோம்? பாருங்கோ நம்மைச் சுற்றிக்

கொண்டு எத்தனைபேர் நிற்கிறார்கள். நாம் செய்யவேண்டியதை ஆத்திற்குப்போய் மாமனாரவர்களுக்குத் தெரிவித்தால் அவர்கள் பல விடங்களிலும் ஆளனுப்பித் தேடச்செய்வார்கள். வாருங்க." ளென, "அடீ உன் வாயடைக்க! ஆத்திற்கு நீதான் பாக்குவைச்சு என்னை அழைக்கணும் போலிருக்கு; வீட்டிலேதான் அதிகப் பிரஸங்கித்தனம் செய்கிறையென்றால், வெளியிலே வந்தாலாகிலும் ஊமைபோட்டமிருக்கப்படாதா? நாலுபேர் சிரிக்க வேண்டி இந்த துர்புத்தி உனக்கு?" என்று அவளை வைதுகொண்டே வண்டியின் பக்கலடைந்தனள். அப்பொற்கொடி என்ன செய்வாள்? பாவம்! பதிலுரையாமல் குனிந்த தலையுடன் கூடத் தொடர்ந்தனள். இதைப்பார்த்திருந்த ஜனங்கள், "சீ, இந்த நகையைப் பறிகொடுத்தும், அம்மாளுக்கு சிறிதும் புத்தியில்லை. அந்தப் பெண்மணியின் முகத்தைப்பார்த்தாலும் பசீ தீரும் போலிருக்கிறது. அவளை இப்படி வாய்கூசாமல் தோசியென்றும், பீடையென்றும் வைகிறாளே! கேட்க கர்ணகடோரமாயிருக்கிறது" என்பவர்களும். "நல்ல மஹராஜி! அவள் நினைவிற்கு சரியாய்த்தானிருக்கிறது அதிர்ஷ்டமும். மனதுதான் வந்ததே! மஹாலக்ஷ்மிக்குச்சமதையாகிய மாதரசியை வைவதற்கு. நன்றாய்ப்பார்த்துத்தான் தண்டித்தாள் ஈச்வரி!" என்பாரும், "ஒரு ஸேவகன் போராதென்று, பக்கத்திற்கொருவனை அழைத்துக்கொண்டு வந்ததினால்தான் பக்குவமாய்ப் பறிகொடுத்தாள்" என்பவர்களும் "ஆமடா, ஏதாவது அக்ரமமாய் வந்த ஸொத்தாயிருக்கும். ஆனதினாலேதான் அது அம்பாள் ஸன்னிதானத்திலடிபட்டுப்போயிற்" றென்பாருமாகப் பலதினுஸாய் உரையாடிக்கொண்டுபோயினர்.

உள்ளபடி அது மேற்கூறியபடி அநீதவழியில் வந்ததே. முரளீதரன் சாந்தி கல்யாணத்திற்கு வாங்கிய ரூபாயை அப்படியே கொடுத்து அதை வாங்கினாள். அது ஒட்டாமலே போய்விட்டது. நகை போட்டுக்கொண்டு நடுக்கூட்டத்தில் போய் நாராயணியை தரிசித்தால்தான் நல்வரம் அருள்வாளா? என்ன! பலர் கூடியிருக்குமிடங்களுக்குப் பகட்டாய் ஆபரணங்களை யணிந்துபோகும் பாவையர்களுக்கு இது, ஒரு படிப்பினையே. பகவானருளால் பணிகளைப்பூண பாக்யம்பெற்றாலும் பதட்டமாய்க் கர்வங்காட்டலாகா தென்பதற்கு, நமது அலமேலம்மாளைவிட வேறு உதாரணம் வேண்டுமோ?

## பதினைந்தாம் அத்தியாயம்

### தந்திஸமாசாரமும், பெற்றோர்களின் கலக்கமும்

வெங்கடேச்வரய்யர், "ஆரங்கே? இங்கே வா." என்றனர். உடனே சிவகாமியம்மாள், "இதோ வந்தேன்." என்று விரைவாய் வந்து அவர்பக்கலில் நின்றனள். அவர் அவளைக் கவலையுடன் நோக்கி "குழந்தையிடத்திலிருந்து கடிதம்வந்து ஸரியாய் ஒருமாதமாகிறது. ஒன்றும் ஸமாசாரமே தெரியவில்லை. அவள் அவ்விடத்தில் எவ்வித கஷ்டநிஷ்டூரங்களுக்கு உள்ளானாலும், அருமையாய்ப் பெற்றுவளர்த்த நாம் கவலையினால் அலைவோம் என்று பத்து நாளைக்கொருதரமாகிலும் எழுதாமலிருக்கமாட்டாளே! என்னமோ எனக்கு இன்று காலை முதல் மனங்கவலுகின்றது. கிளியை வளர்த்து மனமொப்பிப் பூனைக்களிப்பதைப்போல, திவ்வியமான குழந்தையை அலமேலு கையில் ஒப்பிவித்தாயிற்று! பத்து நாளைக்குக் கூட்டியனுப்ப வேணுமென்று, பலவிதத்திலும் அந்த மனுஷ்யனுக்குக் கடிதமெழுதியும், அவர் பதிலே எழுதவில்லை. என்ன செய்கிறது?" என்றனர். சிவகாமி அம்மாள் வாடிய முகத்துடன் அருகில் அமர்ந்து, "என்ன அஸந்தர்ப்பமோ! ஒருவேளை கடிதம் எழுதக்கூடாதென்று சொல்லிவிட்டால் அவள் எப்படி எழுதுவாள்? எது வேண்டுமானாலும் இருந்து விட்டுப்போகிறது. நம்மவயறு எரியாமல் அவள்எங்கேயாகிலும் உயிரோடு இருந்தால் ஸரி. என் வயற்றிலே பிறந்ததற்கு அவளுக்கு என்னென்னவெல்லாம் வரவேணுமோ அது வந்துதானே தீரும். நேத்தியக் குழந்தை, இப்பதான் அவள் நழுவ நழுவப் பாவாடை கட்டிக்கொண்டு பள்ளிக்கூடத்திலிருந்து குதிச்சு குதிச்சுக் கொண்டு ஓடிவர மாதிரி இருக்கு. அதுக்குள்ளே அதுக்கு என்ன கஷ்டம்! ஸாதாரணமாய் ஒரு சின்னவார்த்தைகூட பொறுக்கமாட்டாள். இப்போ என்னமாய்த்தான் பொறுமையுடன் இருக்கிறளோ? அந்தப் பாவியின் படுத்தலை எல்லாம் ஸகித்து அப்பா! என் வயிறு கொதிக்கிறது. அந்தப் பிள்ளைக்குப் பரீக்ஷையாகி ரொம்ப நாளாய் விட்டாப்போலிருக்கிறதே! என்னத்தினாலே ஊர்பக்கம் எட்டிப்பார்க்கவேயில்லை? அவாள்தானிப்படி இருக்கிறர்களென்றால், இவன் படிச்சபிள்ளைதானே! இவனுகிலும் சற்று ஆதரவாயிருக்க

லாகாதா? என்னமோ நாம் செய்தபாவம்!" என்றனள். இதற்குள் தெருவில, யாரோ "ஸ்வாமி, ஸ்வாமி" என்றழைக்கும சபதம் கேட்ட ஐயர், "யாரங்கே?" என "தந்தி," என்றான்.

உடனே பதறிய மனதுடன் அவர் எழுந்து சென்று, கையெழுத்து செய்து அவனிடமளித்து தந்தியைப் பிரித்துப் படிக்க, கண்களில் நீர் ததும்ப, முகஞ் சோர்ந்தது. அதைக் கவனித்த மனைவி, "என்ன விசேஷம? குழந்தை சௌக்யம்தானே. தந்தியாரடித்திருக்கிறார்கள்?" என, சங்கரநாராயணையர் அடிக்கடி நிருபம் எழுதும், "நீலாம்பாள் அசௌக்கியமாக இருக்கிறாள். உடனே வரவும்" என்று எழுதியிருப்பதாயும் தெரிவிக்கவும் அவ்வம்மணி, என்ன செய்வாள்? பாவம்! கலங்கிய மனதுடன் கண்ணீர் ஆறாய்ப்பெருக, "இப்போ, நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள்? பின்னே புறப்பட வேண்டாமா?" என, "ஆம, இந்த பத்தரைமணி வண்டியில புறப்பட்டால, அஸ்தமிக்கவுடனங்கு போகலாம்; வீட்டை சிவராமன் பார்த்துக்கொள்வான். நீயும் கூட வரத் தயாராயிரு" என்றனர். அவ்விதமே அன்று இரவு ஏழரைமணி ஸமாரக்கு, படபடவென்றடித்துக் கொள்ளும் மனதுடன், சங்கரநாராயண ஐயர் வீடுவந்து சேர்ந்தார்கள் உட்புகுந்தவுடன, நீலலோசனியின் தேகஸ்திதியைப் பற்றி வினவ, அவர் "ஒன்றும விசேஷமில்லை, காலில் ஏதோ சிறு புண்ணொன்றும், அதற்காகத்தான் ஜுரமொன்று டாக்டர் சொன்னதாயும், நேற்று கொஞ்சம ஜுரம அதிகமாயிருந்ததினால் டாக்டர், அவள் தாயார் வந்தால அவளுக்குப் பத்தியம முதலியது கொடுப்பதற்குமஸமீபத்தில இருப்பதற்கு ஸௌகரியமாக இருக்கும் என்றதின் பேரில் தந்தியடித்தேன் அதுகூட அனுவசியம, ஆதலினால் பொம்மனுடிக்கிறதோ ஏதோ வீட்டுவேலை ஸரியாயிருக்கிறபடியாலடிக்கும்படி நேர்ந்தது" என்றும் சொன்னார். "அதனாலென்ன? இப்போ அந்தக் குழந்தைக்காகப் பாடுபடாமல எங்கள் தேகம என்னத்திற்கிருக்கிறது? நீலா எங்கேயிருக்கிறாள்?" எனக்கேட்ட வெங்கடேச்வர ஐயரை உள்ளழைத்துப்போகும்படி அருகிருந்த சேவகனுக்கு ஐயர் கட்டளையிட்டனர். இதற்குள் ஸமாசாரம் கேட்டு, அலமேலு அவ்விடம் வந்து சிவகாமியம்மாளை வரவேற்றனள். பிறகு ஸதிபதிகள இருவரும் தமது கண்மணிபோன்ற அருமைச் செல்வியிருக்கும் அறையை நாடிச்சென்றனர். அந்தோ! என்ன பரிதாபம்! ஒரு பழய பாயின்மீது அவள் புடவையிலொன்றை மடித்துப்போ

ட்டு கிழிசல் தலையணை ஒன்றை வைத்து அவளைப் படுக்கவைத்தி ருந்தது. எதிரிலிருந்த சுவற்றிலுள்ள மாடத்தில் உருட்டிவைத்தி ருக்கும் சாணத்தின் மீது கல்விளக்கு ஒன்று மினுக்கு மினுக்கெ ன்று எரிந்துகொண்டிருந்தது. அவளது தலைப்பக்கத்தில் இர ண்டு மருந்து சீசாக்கள் வைக்கப்பட்டிருந்தன. பார்த்தார் ஐயர். அவருக்கு ஹோ வென்று கதறக்கூடியவிதமாய் துக்கம் பொங்கி விட்டது. அறிவால் அடக்கிக்கொண்டு, தனது நேசப்புத்திரியருகில் உட்கார்ந்து உற்றுநோக்கினர். கண்மூடியிருந்தது; மெதுவாய் நெற் றியைத் தொட்டுப்பார்க்க, ஜுரம் நெருப்புப்போல் காய்வதையறிந்து "அம்மா ! நீலா, நான் வந்திருக்கிறேனடி ! என்தங்கமே, உன் கண் ணைத்திறந்து என்னையும், தவிக்கும் உன் தாயாரையும் பாரடி ! அம் மணீ" என்றனர். என்னசெய்கிறது ? அவளுக்கு ஸ்மரணை யிருந் தாலல்லவோ அதற்கு. ஜுரவேகத்தினால் இந்த உலக சிந்தனை அவ ளுக்கு இல்லை. ஐயர் மனமோ தத்தளிக்கிறது ! ஸம்பந்தியினிடம் ஓடிவந்து குழந்தைக்கு இப்போது ஜுரம் வந்திருக்கிறாப்போலே யிரு க்கிறதே. தெர்மாமெடர் (ஜுரத்துக்கு வைத்துப்பார்க்கும் குழாய்) தங்களிடமிருக்கிறதோ ? என, "என்னமோ ! உள்ளே அவளைக் கேட்டால் தெரியும்" என்றனர். வெங்கடேச்வர ஐயர் மனைவியை அழைத்து, அலமேலுவைக்கேட்டு வரச் சொல்ல, அந்த அம்மணி யும் போய்விசாரித்தனள். அதற்கு அவள் "இங்கே குழாயும்கிழாயும் ஆர் வைச்சுப் பார்க்கிறா ! என்னமோ ஜுரமாயிருந்தா ஒருநாள் லங்கணம் போடுவா. மறுநாள் கஞ்சிகொடுப்பா; அப்பறம் துளி ரஸஞ்சாதம் போட்டு வெந்நீர் தூத்தங்கொடுப்பா. கண்டதுண்டு. அதிசயத்துக்கேத்தாப்பலே தான் இருக்கு எல்லாம்" என்றாள். என்ன செய்வாள் பாவம். சிவகாமி அம்மாள் முகம் கறுகினவளாய் "இல்லையா" மென, தனது நாதனுக்குப் பதில் கூறினாள். ஐயர், "நீ குழந்தையிடம் உட்கார்ந்திரு; நான்போய் அதையும் வாங்கிக் கொண்டு டாக்டரையும் அழைத்து வருகிறேன்," என்று வெளிப் பட்டனர். சங்கரநாராயண ஐயர், "சாப்பாட்டு வேளையில் எங்கு போகிறீர்கள் ? ப்யூனிடம் ரூபாயைக்கொடுத்தால் வாங்கி வருகி றான்," என்றார். "இல்லை ஸார் எனக்குப் பசியில்லை. தாங்கள் எனக்காகக் காக்கவேண்டாம். நானே போய்விட்டு ஒரு நொடியில் வந்து விடுகிறேன்," என்றுரைத்து, ஒரு ஜட்காவை யமர்த்திக்கொ ண்டு வைத்தியர் வீடடைந்து "ஸமாசாரம் இப்படி" என்று கூறவே

அவர் மிக வருத்தத்துடன் "நான் பத்து தினங்களுக்கு முன்னமே ஒருநாள் அந்தப் பெண்மணிக்கு ஜுரமாயிருப்பதாக தற்செயலாய் அவாள் வீட்டிற்குப் போயிருந்தபொழுது கேள்விப்பட்டுப் போய்ப் பார்த்தேன். ஆனால் பெரிய இடத்து ஸமாசாரம் வெளியிடலாகாது. முழங்காலுக்குக் கொஞ்சம் கீழே, எலும்புள்ள பாகத்தில் ஒரு பெரிய புண்ணிருந்து அதற்காற்றாது ஜுரமடிப்பதாகத் தெரிந்து கொண்டேன். புண்ணுக்குக் காரணமென்னவெனக்கேட்க, கீழே விழுந்தபோது இரும்புச் சட்டம் ஒன்று எலும்பில் ஆழப் பட்டுவிட்ட படியால் உண்டாயிற்று என்று அவர் ஸம்ஸாரம் கூறினாள். என் புத்திக்கு அது ஸரியென்று தோன்றவில்லை. பிறகு மருந்து அனுப்புவதாய்ச் சொல்லிவந்தேன். இன்று வரையில் என்னை வந்து அழைப்பவர்களைக் காணோம். ஆனால் நான் முதலில் புண்ணிற்காகவும் ஜுரத்திற்காகவும் கொடுத்த மருந்தால் குணமாகியிருக்கலாமென்று எண்ணிக்கொண்டிருந்தேன். இப்பொழுது தாங்கள் சொல்வதைப்பார்த்தால் விபரீதமும்கவலைக்கு இடமுமாகவல்லவோ தோன்றுகிறது!" என்றனர். ஐயர், "ஐயா, இது தாமதஞ் செய்வதற்குக் காலமன்று; சீக்கிரம் தயவுசெய்து மருந்துப்பெட்டியுடன் புறப்படுங்கள். அந்த ஒரு பெண்குழந்தையின் பெருமையைக்கொண்டு நாங்களிவ்வுலகில் உலாவி வருகிறோம். அவள் விஷயமாய் எவ்வளவு ரூபாய் செலவானாலும் எனக்குப் பாதகமில்லை. எப்படியாவது அவள் ஸுகமடைந்தால்போதும். ஜுரம்அறியும்குழாய் ஒன்று எனக்குத்தேவையாயிருக்கிறது. எங்கு கிடைக்கும்?" என, வைத்தியர் தன்னிடத்திலேயே இருப்பதாகக்கூறி ரூபாயைப் பெற்றுக்கொண்டு ஒன்றை அளித்தனர். பிறகு இருவரும் வீடு வந்து சேர்ந்து நீலாம்பாள் சயனித்திருக்கும் அறையில் புகுந்தனர். சிவகாமி அம்மாள், அப்பொழுதுமுதல் அவள் கண் விழிக்க வில்லை என்றும், சிறிது புரண்டு மாத்திரம் படுத்தாளென்றும் கூறினாள். வைத்தியர் குழாயை அவளிடத் தளித்து வைக்கும்படி யுரைக்க, அவ்விதமே வைத்தெடுத்துப் பார்க்கும்போது சரியாப் நூற்றைந்து டிகிரி இருப்பதை உணர்ந்த வைத்தியர் திடுக்கிட்டு, மெழுகுவத்தி தீபத்தையெடுத்து சிவகாமி அம்மாள் ஒத்தாசையின்பேரில் காலிலுள்ள இரணத்தை நோக்க, அது நன்றாய் சீழ்ப்பிடித்து குத்திக்குடைந்து வேதனை செய்வதாலிப்படி ஜுரம் ஜாஸ்தியாக இருக்கிறதென்று கூறியதுடன் மருந்து ஒன்றும் போடாமல் இப்படி இதை வளர்த்திவிட்டது பிசகென்றும் உரைத்து, தான் முன் ஜாக்கிரதையாக மருந்துகள் கொண்டு

வந்தது, நல்லவேளைக் கடையாளமென்றும் சொல்லி, வெந்நீரில் ஏதோ திராவகத்தைச் சேர்த்துப் புண்ணை யலம்பி, மருந்து போட்டுக் கட்டிவிட்டு உள்ளுக்கு மருந்து கொடுக்கும்படி ஐயரிடம் ஊற்றிக்கொடுக்க, அவர் தனது செல்வக்கிளியை எடுத்து அணைத்துப் பிடித்துக்கொண்டு பிரயாசையுடன் அவளை யருந்தும்படி செய்தனர். வைத்தியர் இம்மாதிரி அதிக காயலாவாயிருப்பவளை தரையில் படுக்க வைத்திருப்பது பிசகென்றும், ஒரு கட்டிலில் மெத்தென்று படுக்கை விரித்து மிருதுவாகிய தலையணையில் அவளைப் படுக்கவைக்க வேண்டுமென்றும், இன்னம் இரண்டு மணி நேரங்கழித்து மறுபடி ஒருமுறை மருந்து கொடுக்கவேணுமென்றும், இரவில் அவளுக்கு ஞாபகம் வந்து ஏதாகிலும் ஆகாரம் கேட்டால் ஸோடாவும் பாலுமாகக் கொடுக்கும்படியு முரைத்துத் தான் அதிகாலையில் வருவதாகச் சொல்லிச்சென்றனர். ஐயர் என்னசெய்வார்! கிடந்து தத்தளிக்கிறார். "ஐயோ என்வீட்டில் நாய்க்குட்டிக்குக்கூட மெத்தை தைத்துப் போட்டிருக்கிறேனே! இங்கே என் தங்கம் தரையில் கிடக்கிறதே! யாரைப்போய் கட்டில் மெத்தை கேட்பேன் ஈசுவரா! இதுவும் நின் சோதனையே" என்று வெளியில் வந்தார்.

சங்கரநாராயண ஐயர் போஜனம் முடித்துத் தாம்பூலந் தரித்துக்கொண்டு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருந்தவர் "என்ன ஸார், இன்னம் சாப்பாட்டிற்கு நாழிகை யாகவில்லையா? தங்களுக்காக ஆத்தில் பெண்டுகள் காத்திருக்கிறார்களே!" என, அவர், "அடாடா, எனக்காக அவர்களேன் காக்கவேணும்? முன்னமே சாப்பிட்டிருக்கலாமே. எனக்கு காலைச்சாப்பாடு சற்று உபரியாய்ப் போய்விட்டது. அது நெஞ்சில் கரித்துக்கொண்டே யிருக்கிறது. சும்மா படுக்காமல், ஒரு டம்ளர் பால் வேண்டுமானால் சாப்பிடலாமென்றிருக்கிறேன்" என்றுரைத்து வைத்தியர் வந்ததையும், அவர் சொன்ன விஷயங்களையும், அறைந்ததுடன் நீலாம்பாள் தேகஸ்திதியின் தன்மை சற்று கவலைக்கு ஹேது வாயிருப்பதாய் தனக்குத் தோன்றுவதாயும் உரைத்தனர். இவ்வார்த்தையைக் கேட்ட அவர், படித்த புத்திமானாகையால் விஷயங்களை கிரஹித்துக்கொண்டு ஆச்சரியத்தோற்றத்துடன் "அப்படியா! எனக்கு ஒன்றும் தெரியாதே? நேத்து இவள், பத்துநாளாய் என்னமோ படுத்துக்கொண்டிருக்கா. அப்புறம் ஊரிலே பிறந்தாத்துக்குச் சொல்லி யனுப்பவில்லை யென்று சொல்லுவா. நம்ம நாட்டு வைத்தியரும் பத்தியம் பரிகாரம் கொடுக்க அவள் அம்மா கூட்டாளி வந்தால் தேவலை யென்று சொன்

ளுர். பின்னுடி சொல்லல்லே என்று சொல்வீர்களே ! தந்தி வேணு மாளுல் அடியுங்கோ வென்றுள். நான் சரிதான் என்று அடிக்கச் சொன்னேன். நானெங்கே அந்தக் குழந்தையைப் பார்க்கிறேனு? எனக்கென்ன ஸமாசாரம் தெரிகிறதென்'' றுரைத்து ஸேவகர்களை யழைத்துக் கட்டில் மெத்தை எல்லாம் கொண்டுவந்துப் போடச் செய்தார். அவளை யதன்மீது தாய் தந்தையர்கள் எடுத்து வளர்த்தக் கண்ட சங்கர நாராயண ஐயர் மனந்தாளாதவராய்த் தன் வீட்டிலிவ் வளவு விஷயங்கள் நடந்தும் தானதை உணராமலிருந்ததற்காக வருத் தப்பட்டார். சாந்தமும் பொறுமையும் ஒன்று சேர்த்து ஒரு உருவாக் கியதைப்போல அவ்வமளியில் அமர்ந்திருக்கும் திருமகளையொத்த மருமகளைப் பார்த்தவுடன் அவரது மனம் திக்கென்று பற்றி எரிக்கி றுப்போல் தாங்கொணுத் துயரமடைந்தனர்.

பின்னர் இரண்டு மணி நேரங்கழித்து மறுமுறை ஒளஷதம் கொடுக்கப்பட்டது. பனிரெண்டரைமணி சுமாருக்கு வேர்த்து ஜுரம் சற்று தணிந்தது. அது வரையில் வாயடைபட்டதுபோல் உட்கார்ந்திருந்த சிவகாமி அம்மாள், புருஷனை நோக்கி குழந்தைக்கு வேர்க்கிறதென்று உரைத்துக்கொண்டே சவுக்கத்தினுல் மெதுவாய்த் துடைத்தனள். ஐயர் ஜுரம் எப்படியிருக்கிற தென்று குழாய் வைத்துப் பார்க்க நூறு வரையில் இருந்தது. ஒரு மணிக்குச் சற்று கண் விழித்தனள். அவளுக்குத் தாய் தந்தையர் அருகிலிருப்பது ஸ்வப்னம்போலத் தோன்றிற்று. தன் கண்ணை நம்பாதவளாய் இரு வரையும், மாற்றி மாற்றிப் பார்க்க, ஐயர் விஷயத்தைத் தெரிந்து கொண்டவராய், ''அம்மா நீலா, நானும் உன் அம்மாளும் ராத் திரி வண்டியில் உன்னைப் பார்ப்பதற்காக வந்தோம்'' என்றனர். அவள் தன் பக்கத்திலிருந்த தாயின் மீது கையைப் போட்டு அணைத் துக்கொண்டு தாகமாயிருக்கிறதாகத் தெரிவித்தனள். வைத்தியர் உரைத்தபடி கொடுக்க, வாங்கிப் பருகினுள். பிறகு தகப்பனுரை யழைத்து கிட்டத்தில் வரச் சைகை செய்ய, அவரும் துடிக்கும் நெஞ் சுடன் பக்கத்தில் அமர்ந்து, ''ஏன் அம்மா, என்ன வேணும்?'' என்றனர். ''இல்லே, நீங்களாய் வந்தீர்களா ? ஆராகிலும் சொல்லி யனுப்பி வந்தீர்களா?'' யென, அவர், அவள் தன்னுடம்பைப்பற்றிக் கவலைப்படுவாளென்னும் எண்ணத்தினுல் ''அதெல்லா மொன்று மில்லே, என்னமோ உன்னிடமிருந்து கடிதம் வந்து ஒரு மாதத்திற்கு மேலாகிறதே, போய்ப் பார்த்து விட்டு வரலாமென்று வந்தேன். பிறகு உனக்கு ஜுரமென்று கேள்விப்பட்டேன்'' என்றுர். அவள்

"அண்ணு! அதெப்படியாகிலும் போகிறது. நீங்கள் உடனே உங்கள் மாப்பிள்ளைக்கு வரும்படி தந்தியடியுங்கள். முகத்திலாகிலும் விழிக்க வரட்டும்" என்றனள். அவளது தேகஸ்திதி அவளுக்கு நன்ருய்த் தெரிந்திருக்கிற தென்பதைக் கண்டுகொண்ட தந்தை, "கண்மணீ! இதென்ன நீ இப்படி அதைரியப்படுகிருய்" என்றவளை உற்று நோக்கக் கடலினும் பெரிய அவள் கண்களிலிருந்து நீரிழிந்து வருவதைக் கண்டனர். உடனே அனலிலிட்ட மெழுகென உருகும் மனதுடன் "அம்மா, இதென்ன பயித்தியக்காரத்தனம்! நீ புத்திசாலியாயிற்றே! நீ வருத்தப்பட்டால் எங்களுக்குத்துக்கமாயிராதா! உனக்கு ஒன்று மில்லையே. வயித்தியர் எப்படிப்பட்ட மருந்து கொடுத்திருக்கிருர் பார்! நாங்கள் வரும்போது உனக்குக் கொஞ்சம் ஜுரம் ஜாஸ்தியாயிருந்தது. இரண்டு வேளை மருந்தில் எவ்வளவு குணமாயிருக்கிறது! தந்தியடிப்பதில் ஆக்ஷேப மொன்று மில்லை; இதோ அடித்து வருகிறேன்! உன் அம்மாளிருக்கிருள் உனக்குத்துணை. ஆனல் அதிகம் பேசாதே" என்றுரைத்து அந்நள்ளிருளில் தந்தி யாபீஸைத் தேடிச் சென்ருர். அவர் திரும்பிவரும்போது மூன்றடித்து விட்டது. அப்பொழுது நீலாம்பாள் கால்வலி தாளாமல் முக்கிக் கொண்டும் முனகிக்கொண்டு மிருந்தனள். மறுபடி யொருமுறை மருந்து கொடுக்கப்பட்டு சிறிது நேரத்திற் கெல்லாம் அவள் சற்று கண்ணயர மற்றவர்களும் கொஞ்சம் படுத்துறங்கினர்.

# பதினாறும் அத்தியாயம்

## அவிவேகத்தின் விளைவும், உண்மைக் காதலின் உணர்ச்சியும்.

ஒரு நாள் சாயந்திரம் எழும்பூர் ஸ்டேஷனில் ஜனங்கள் நடமாடும் மேடையில், பார்ப்போர் உள்ளங் கவரும் பால்யனொருவன் பயந்த முகத்துடன் பரபரவென்று அலைந்து கொண்டிருந்தான். பலரும் புகைவண்டி வரும் வழியைப் பார்த்து நிற்க, குறித்த காலத்தில் கோஷத்துடன் வண்டித்தொடர் வந்து நின்றது. பயித்தியங் கொண்டவனைப் போலவேயும் பருவகுமாரனும், தன்னினைவென்பதில்லாமலே இரண்டாவது வகுப்பு வண்டியிலேறி உட்கார்ந்தான். வண்டி புறப்பட இரண்டு நிமிஷம் இருக்கும்போது, 'முரளீதரா! முரளீதரா!' என்று கத்திக்கொண்டு நடராஜன் ஓடிவந்தனன். ஸமீபத்தில் வரும் வரையில் அறிவழிந்தவனைப்போல அமர்ந்து, அக்கட்டழகன் கிட்டவந்து கூப்பிட்டவுடன் எட்டிப்பார்க்க தன்னன்புள்ள நேசனைக் கண்டான். உடனே ஆச்சரியத்துடன் 'நீ எப்படி வந்தாய்?' என, அவன், "எல்லாம் அப்புறம் சொல்லுகிறேன். டிக்கெட் வாங்கியிருக்கிறாயா ? உன்னைப் பார்த்தாலெனக்கு ஸந்தேஹமாயிருக்கிறதே" என்றான். அவன், "நிஜமே, நான் மறந்துதான் போனேன். பிறகு கார்டினிடத்தில் சொல்லிக்கொள்ளலாமென்றிருந்து விட்டேன்" என்றான். "நன்றாயிருக்கிறது ! இரு, நான் ஒரு நொடியில் வாங்கிவருகிறேன்" என்றான். அவன் போய் டிக்கெட் வாங்கி வருவதற்குள் வண்டி நகர்ந்து விட்டது. "ஐயோ ! நண்பன் வரவில்லையே!" என்று முரளீதரன் கலங்க, கதவைத்திறந்து கொண்டு நடராஜன் உள்ளே வந்தான். கண்டவுடன் "நீ ஸமய ஸஞ்சீவியா ! வண்டிதான் புறப்பட்டு விட்டதே ! அதுவரையில் உன்னைக் கண்ணுக் கெட்டியதூரம் பார்த்தும் காணோமே! இப்போது எப்படி வந்தாய் !" என்றனன்.

நட. நான் ஒருவேளை வண்டி தப்பிப்போய்விடப்போகிறதென்று கடை வண்டியில் நின்றுகொண்டு தெரிந்த போர்ட்டர் ஒருவனைக் கொண்டு டிக்கெட் வாங்கிவரச் சொன்னேன். அவன் இத்தொடர் நகரும் சமயத்தில் ஓடிவந்து கொடுத்தான், அதனால்தான் வரச் சற்று தாமதம்.

முர. நீ எப்பொழுது திருவள்ளூரிலிருந்து வந்தாய்? இன்று காலை முதல் நான் படும் பாட்டிற்கு நீ கூட இல்லையே என்று எனக்கு மிகவும் வருத்தம்.

நட. ஆர் தந்தியடித்திருக்கிறார்கள்? அப்பாவா?

முர. இல்லையே, மாமனாரடித்திருக்கிறார். அதுவும் இரவு இரண்டரை மணிக்கு! எவ்வளவு யோசனைக்கு இடம் இதிலிருந்து உண்டாகிறது பார்!

நட. என்ன தானடித்திருக்கிறது? தந்தி எங்கே இப்படி கொடு.

முர. "என்ன! 'நீலாம்பாள் நிரம்பவும் அசௌக்கியம். உன்னைப் பார்க்க அபேக்ஷிக்கிறாள். உடனே புறப்பட்டுவா' என்றிருக்கிறது. ஏதோ மிதமிஞ்சி இருப்பதனால் தானே இவ்வண்ணம் எழுதியிருக்கிறார்கள். என்னடா செய்வேன் நடராஜா! உயிருடன் அவளைக் காண்பேனா" வென்று அவனைக் கட்டிக் கொண்டு கதறினான். அவனும் தாங்கொணாத் துயரத்துடன் அவனை அணைத்து, "எனக்குத் தெரியுமே உன் செய்தி! அதற்காகத்தானே வந்ததும் வராததுமாய் ஓடிவந்தேன்! மனுஷ்யனுக்கு தைரியம் வேண்டாமோ? உன் நல்ல குணத்திற்கும், உத்தமியாகிய நீலாம்பாளின் பொறுமைக்கும் ஒரு போதும் குறைவு வராது. அதைரியப்படாதே. இன்று முழுதினும் நீ ஆகாரம் செய்யவில்லையாமே! எழுந்திரு; சிறிது உணவருந்து. பிறகு பேசுவோம். இல்லாததை எல்லாம் நினைத்து வருந்தாதே. சொல்வதைக்கேள்" என்றான். இவ்விதமாக, இரவை ஓர் யுகமாகப்போக்கி காலையில் திருச்சி வந்துசேர்ந்தனர். உடனே நல்ல ஜட்கா ஒன்றை அமர்த்திக் கொண்டு ஐந்துநிமிஷத்தில் வீடுவந்து சேர கீழிறங்கி உட்புகலும், ஒருவர் முகத்திலும் ஈயாடவில்லை. பார்த்தான் முரளீதரன். ஸப்தநாடியும் ஒடுங்கி இடிவிழுந்தவனாய், தகப்பனாரை நெருங்கி 'ஏன், உயிருடன் இருக்கிறாளோ' வென்று நெஞ்சடைக்க நடுக்கத்துடன் கேட்டனன். அதற்கவர் 'உம், இருக்கிறாள்' என்றார். உடனே அவன் அவளிருக்கும் அறை நாடிச்சென்றனன். கண்டான் தன் கட்டழகமைந்த காதலியை. பாற்கடல் போன்ற அப்பள்ளியில், பரந்தாமன்தேவியே போல் படுத்திருக்கும் பத்மாக்ஷியைப் பார்த்தவுடன் அவனதுள்ளத் தழுந்திக்கிடந்த அன்பும் துயரமும் ஒருங்கே மேலெழ

"ஐயோ," வென்றான். ஒருதரம் வைத்தியர் அவன் வாயைப் பொத்தி "கத்தாதே, அவளுக்கு மயக்கம் கொடுத்திருக்கிறது. அதனால் அப்படிப் படுத்திருக்கிறாள். நீ படித்தவனாயிருந்தும் இப்படி பதரலாமா ?" வென்றார். முரளீதரன் "அதெல்லா மிருக்கட்டும், நீர் சற்று தயவுசெய்து வெளியில் வாரும்" என்று அழைத்துக்கொண்டு நடராஜன் தொடர, தோட்டத்தில் வந்து அவர் கையைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு, "ஐயா, நமக்கு இன்று நேற்று பரிச்சயமில்லை. நான் சிறுவனாயிருக்கும் காலந்தொட்டு ஏற்பட்டபழக்கம். எனக்கு என் தந்தை வேறு, நீங்கள் வேறில்லை. ஆகையால் நீங்களும் அவ்விதமே என்னை நினைத்து பதிலுரைக்கவேண்டுகிறேன். இப்போது என் மனைவிக்கு நேரிட்டிருக்கும் நோய் எப்படிப்பட்டதென்பதையும், அது விஷயத்தில் வீண்சிரம மெடுத்துக் கொள்வதில் பயனில்லை. எப்படியும் அவளுயிரை அது உண்டு விடுமென்றாலதையும், இல்லை, ஏதாகிலும் வேறு விதமாகச் சிகித்சை செய்தால் அதற்கு விமோசனமேற்படு மென்றாலதையும் ஒளியாமல் சொல்லவேணும்" என்றான். அவர் "அப்பா, இப்போது அவளுக்கிருக்கிற தொந்தரவெல்லாம் அந்த ரணத்தினாலேயே" யென்றார்.

முர. ரணமா, ஏது சிரங்கு புறப்பட்டிருக்கிறதா ? எனக்குத் தெரியாதே.

வயி. சிரங்கா ? இல்லை, இல்லை. வேறே காலில் ஏதோ புண்.

முர. காரணமில்லாமல் காலில் இவ்வளவுதூரம் விபரீதம் ஆகும்படி ஒரு புண் உண்டா? நீங்களேதோ ஸங்கதியை மறைக்கிறீர்கள்."

வயி. அதின் விபரமென்னமோ எனக்குத் தெரியாது. சில தினங்களுக்கு முன் நான் பார்த்தபோது முழங்காலிற்குச் சற்றுக் கீழாக எலும்பின்மீது ஆழப்பதியும் விதமாய் சூடிட்ட மாதிரி புண்ணிருந்தது. அப்பவே அதை சரிவர கவனித்து மருந்து போடாமல் ஜலத்தில் அலைவதினாலும் மற்றும் பாராதகுற்றத்தினாலும் இப்படி மலைபோல் பெருகிவிட்டது. உன் தாயார் சொன்னதில் இடறிவிழுந்து இரும்புச்சட்டத்தில் காயம் பட்டுக் கொண்டதாயும் சொன்னாள். நான் நம்பவில்லை. இப்பவும் ஒரு ஆசை. நல்ல ரணவைத்தியன் எவனேனும் அகப்பட்டால் ஒருக்

கால் பிழைக்கலாம். எனக்குப் புண்ணில் கையாடுவதில் அதிக பரிச்சயமில்லை.

முர. உங்களுக்குத் தெரிந்து இங்காகிலும் தஞ்சையிலாகிலும் யாராவது இருக்கிறார்களோ?

வயி: ஏன், இந்த ஊரிலேயே பெரிய பாஸ் செய்த ஒருவர் வந்திருக்கிறார். இப்பதான் இரண்டு வாரமாகிறது. அவர் மாதிரி என்னமோ எனக்குத் தெரியாது. ஆனால் கெட்டிக்காரர் என்று தான் கேள்வி. அவரை வேணுமானால் அழைத்து யோசியுங்கள்."

முரளீதரன் நடராஜனை தங்கள் வண்டியைப் போட்டுவரும்படியனுப்பிவிட்டு, தகப்பனாரிடம் விஷயங்களைத் தெரிவித்துப் பெரிய டாக்டரை அழைக்கச் சென்றான். மறுபடி முக்கால் மணிநேரத்தில் மேற்கூறிய வைத்தியருடன் வந்து சேர்ந்தான். அம்மனுஷ்யனும் சிரித்த முகத்துடனும் கம்பீரத் தோற்றத்துடனும் வரும்போதே, நங் கண்மணியாகிய நீலலோசனி இனி பிழைத்து விடுவாள் என்று சொல்லக்கூடிய விதமாய் இருந்தது. மற்றவர்கள் வெளியில் நிற்க, இரு வைத்தியர்களும் முரளீதரனும் நோயாளி இருக்கு மறையில் பிரவேசித்தனர். நீலாவின் பக்கத்தில் சிவகாமி அம்மாள் நின்றிருந்தனள். வியாதியின் குணங்களை புதிதாக வந்தவருக்குக் குடும்பவைத்தியர் எடுத்துரைத்தனர். அவரும் ஆழ்ந்த கருத்துடனதை கிரஹித்துக்கொண்டு, பின்னர் நோயாளியை அணுகி நாடியைப் பிடித்துப்பார்த்தனர். "என்ன ஐயா! இவ்வளவு பலஹீனமாயிருக்கிறதே! என்னமோ பகவானிருக்கிறார்! இந்த அம்மாளைச் சற்று வெளியிலனுப்பி விடுங்கள்" என்று முரளீதரனிடம் இங்கிலீஷில் சொன்னார். இதை யறிந்து மற்றவர் "அம்மா தாங்கள் சற்று வெளியிலிருங்கள். அவசியமானபோது கூப்பிடுகிறேன்" என்றார்.

அவ்வம்மணியும் எப்படியாகிலும் தன் கண்மணி பிழைத்தால் போது மென்று வெளிச் சென்று விட்டாள். புதுவைத்தியர் முரளீதரனை நோக்கி, "நீர் தைரியமாயிருப்பீரா? அல்லது பயப்படுவீரேயாகில் வெளியில் போய் விடும். சற்று தைரியசாலியாகிய ஒருவனை வரச் சொல்லும்" என்றார். பார்த்தான் முரளீதரன். இந்த கண்ட்ராவி தன்னால் ஸகிக்க முடியாதுபோல் தோன்றியபடியால் தெருவில் நிற்கும் நடராஜனை யழைத்து "டாக்டர் தனக்கு ஸகாயத்துக்கு

யாரையாகிலும் இருக்கச் சொல்லுகிறாய்? அங்கே நிற்க என்னால் சாத்தியப்படவில்லை. நீ சற்றுப்போ" வென்றான். அவன் பரிதாபத்தைக் காணச் சகியாமல், "இதோ போகிறேன். நீ இங்கு ஹாலில் சற்று உட்காரு" என்றுரைத்து உட்சென்றான். அதற்குள் டாக்டர் கட்டவிழ்த்து ரணத்தைச் சோதித்துக்கொண்டிருந்தார். அங்கு ஹாலில் உள்ளிருக்கும் சீழ் வெளிவர இடமில்லாமல் வாய் மூடியிருப்பதை யறிந்து பக்குவமாய் அதைக் கொஞ்சம் கீண்டி விடவே கடகடவென்று அதிலிருந்து சீழும் ரக்தமும் கொட்டிற்று. தக்கபடி மருந்து வைத்துக்கட்டி உள்ளுக்கு ஜ்வரத்திற்கும், பலத்திற்கும், தனித்தனி மருந்து கொடுத்து விபரம் முரளீதரனிடம் சொல்லி விட்டு, வலி தெரியாமலிருக்க பயக்கத்திற்கு மருந்து கொடுத்திருப்பதால் ஒன்றும் பயப்படவேண்டாமென்றுரைத்து சங்காராமய்யர் வெங்கடேச்வரய்யரிவர்களிடம் விடைபெற்று மறுபடி சாயங்கிரம் வருவதாகக் கூறிச் சென்றார். நாலு நாளாகவே வீட்டில் எல்லாரும் திகிலடைந்து கிடக்கிறார்கள்! பெரிய டாக்டர் வந்து இம்மாதிரி ரணத்தின் ஸமாசாரத்தைப்பற்றி 'கஷ்டம்'வென்று பேசிக்கொள்ளவே விசேஷகலக்கம் அலமேலம்மாளுக்கு உண்டாய்விட்டது. இதை அருகிருந்து கண்ணால் பார்த்த நடராஜன், டாக்டர் புறப்பட்டுப்போனவுடன் பின் புறத்திலுள்ள குளக்கரையிலமர்ந்து ஹோ வென்று கதறி அழுது விட்டான். அவனைத் தேடிக்கொண்டு அச்சமயம் முரளீதரனங்குவர, இவனது ஆர்ப்பாட்டத்தைப் பார்த்துப் பின்னும் விசேஷ கலக்கம் கொண்டு, "அப்பா ஏனடா? இப்படி அழுகிறாய்? டாக்டர் என் கண்மணி பிழைக்காளென்றுரைத்தாரா? அப்படியிருந்தால் என்னிடம் சொல்லடா. இப்படியே இந்தக்குளத்திலாகிலும் வீழ்ந்து அந்த அவச்சொல் கேட்கும் முன்னர் நானும் தொலைந்து போகிறேன். என்னை நம்பிச் சில வருஷங்களாய் எவ்வளவோ கஷ்டங்களை இஷ்டமுடன் ஸஹித்து வந்த அந்த மாசில்லா மாணிக்கத்தை மனத்திருப்தியடையச் செய்யாத மஹாபாவியடா நான். அடே, இத்தனை இஷ்டனுச்சுமே. நீயாகிலும் ஒரு வார்த்தை நிஜம் சொல்லலாகாதா? என் மனந்தவிக்கின்றதடா. ரூடென்று வைத்தியர் சொன்னரே! அதென்ன விஷயம்? மஹாபாவி சித்தம்மை செய்த காரியமோ? ஐயோ, அச்சமயம் அவள் மனம் என்ன பாடுபட்டிருக்கும்! என்னமோ துன்மார்க்கன் ஆசை மொழிகளை நேசமாய்க்கூறி நம்மை யிப்படிக் கிலேசமடையச்செய்து பேசாமலிருக்கிறானே என்று எண்ணினளோ? நான் என்னடா செய்வேன்?

நடராஜா! உள்ளதைச் சொல்லடா" வென்று அவனை நமஸ்காரம் செய்தான். இதைக்கண்ட நேசன் வருத்த முற்று, "அன்பா! ஏன் வருந்துகிறாய்? டாக்டர் அப்படி யொன்றும் சொல்ல வில்லை. சமீபத்தில் போய் சாந்தஸ்வரூபியின் நிலைமையைப் பார்த்தவுடன் என் ஆவி உருகித்தவிக்கிறதப்பா! அடேப்பா! என்ன பொறுமை! என்னபொறுமை! அதற்கு அளவு கிடையாதா? பொறுத்துப் பொறுத்து உயிருக்கே உலைவைத்துக்கொண்டு விட்டாளே! மனந்தான் வந்ததே இக்கொடுங்காரியம் செய்ய மஹாராஜிக்கு!" என்றான். அதற்குள் சேவகன் ஓடிவந்து "சின்ன அம்மணிக்கு மருந்து கொடுக்க ஏதோ கேட்க வேணுமாம். நாகப்பட்டினத் தெஜமா னழைக்கிறார்கள்" என்றான். இவ்விதம் மூன்று தினம் திகிலும் தவிப்புமாய்ச் சென்றது. நாலாம் நாள் காலை முதல், குத்தல் குடைச்சல் மிகுதி; அத்தனை நாளுக்காக அன்றே அப்பெண்மணி வாய்திறந்து அலற்றினள். அவள் ஒரு தரம், "அம்மா! அப்பா! ஹா! ஹா! ஐயோ"வென்று உரைக்கும்பொழுது வீட்டிலுள்ளோர் அனைவரும் ஒவ்வொரு தினுஸாய் வேதனையுற்றனர்.

சாயரக்ஷை டாக்டர் வந்தார். முரளீதரன் "ஸார், இன்று முழுதிலும் தங்கள் நோயாளி வாய் மூடவேயில்லையே! என்ன செய்கிறது? எங்களுக்கு நிரம்பவும் கவலையாக இருக்கிறதே!" என்றான். அதற்கவர் நகைத்து "பயப்படவேண்டாம், அது நற்குறியே, மருந்து சரியானபடி வேலை செய்ய ஆரம்பித்திருக்கிறபடியால் உமது மனைவிக்கு இனி தீர்க்காயுளே, தைர்யமாயிரும்," என்று முரளீதரன் முதுகில் தட்டினார். அவனும் மலர் முகத்துடன் அவருடைய கைகளைப்பற்றி "இந்த அமிர்த தாரை போன்ற வார்த்தைக்கு நானென்ன விதமாய் நன்றி செலுத்துவே" னென்றனன். அதற்கவர் தலையசைத்துக்கொண்டே நீலாம்பாளிருக்கும் அறையில் புகுந்தனர். அங்கு நின்றிருந்த வெங்கடேச்வரய்யர், "என்ன! காலையிலிருந்து குழந்தை திறந்த வாய் மூடவேயில்லை. கண் திறவாமலே இப்படி அலட்டுகிறாள். எங்களுக்கு என்ன தெரிகின்றது! உங்களை வழி பார்த்திருக்கிறோம். அந்தக் குழந்தையின் பாதையைப் பார்த்து ஸஹிக்கவே முடியவில்லை" என்றார். டாக்டர் "அதனாலொன்றும் பாதகமில்லை. வீண் சஞ்சலம் வேண்டா"மென வுரைத்து, கட்டவிழ்த்து புண்ணிற்கு மருந்து போட்டுக் கட்டிவிட்டு "இனியவ்வளவு அலட்டவிருக்காது. புண்ணிலிருந்த விஷம்குறைந்து

போயிற்று. இன்று காலையிலிருந்து ஜுரமில்லை. மருந்தினால் மயக்கமே தவிர வேறில்லை. இனி வேறு மருந்து கொடுக்கிறேன்; மயக்கத்திற்கு வேண்டியதில்லை. ரணத்தின் வலி தோன்றியிருக்க அதிலேயே தக்கபடி வெகு சிரேஷ்டமான மருந்து போட்டுக் கட்டியிருக்கிறேன். முதல் நாள் நான் மிகவும் திகிலடைந்து போனேன். ஆனால் இனி கடவுள் கிருபையால் ஒன்றுக்கும் பயப்பட வேண்டியதில்லை" என்றுரைத்து விடைபெற்றுச் சென்றார். அவருடைய சொற்படி வேறு மருந்து கொடுக்கப்பட்டது. அன்றிரவு பன்னிரண்டு மணிக்கு வழக்கம்போல் ஔஷதமளித்து விட்டு அவளருகில் ஒரு நாற்காலியின்மீது முரளீதரன் உட்கார்ந்திருந்தனன். அப்பொழுது நீலலோசனியின் மயக்கம் சிறிது சிறிதாய்த் தணிய ஒரு மணி சுமாருக்குத் தன் நினைவுடன் மெதுவாய்க் கண் விழித்தாள். மண்ணெண்ணெய் விளக்கு அவ்வுள்ளின் வழி கொண்டு வரலாகாதென்று வைத்திய ருத்தரவாகையால், ஒரு மெழுக்குவர்த்தி தீபம் எரிந்துகொண்டிருந்தது. அப்பொழுது தனதருகில் அன்னை உட்கார்ந்திருப்பது வாடிக்கையாகையால் அவளெங்கிருக்கிறாளென்று பார்க்கக் காணாதவளாய், அவளுக்குப்பதிலங்கு யார் வீற்றிருக்கிறார்களென அறிய உற்று நோக்கினாள். முரளீதரனுடனே எழுந்து, அவள் முகத்தருகில் குனிந்து "கண்ணே! என்ன பார்க்கிறாய்? நான் பட்டணத்திலிருந்து வந்து நாலு நாளாச்சுதே!" என்றான். திடனற்ற சரீரத்துடன் கூடிய நவமோஹனாங்கி தன் நளின மலர்க் கரங்களால் அவனைச் சேர்த்து தனது முகத்துடன் முகமணைத்துக்கொண்டாளே ஒழிய, தேகத்தில் வலிவு இல்லாததாலோ, துக்கமிகுதியினால் வார்த்தை வெளிவாராததினாலோ, தனதினிய காதலனை இனிக் காணேம் என நினைந்த அவள் திரும்பப் பார்க்கப்பெற்ற ஆனந்தத்தினாலோ, அல்லது பேசினால் சித்தியம்மாள் கோபிப்பாளென்னும் பயத்தினாலோ, அவள் வாய்திறக்கவில்லை. இப்படி சில நிமிஷங்கழிய, பின்னர் அவளது கைக்கட்டு தளர்வுறக்கண்ட முரளீதரன் அவள் பக்கலில் அமர்ந்து அவளது மாசற்ற அழகு வாய்ந்த முகத்தை மெல்லிய வஸ்திரத்தினால் துடைத்தனன். அவளும் தனதழகிய கையை அவன் மீது போட்டு "நாதா! இனி நான் பிழைத்து விடுவேன். அப்படியே சாவதாயிருந்தாலும் மனத் திருப்தியுடன் போவேன்" என்றனள். முரளீதரன், "கண்மணீ! ஏனவ்விதம் உரைக்கிறாய்? இவன் கல் நெஞ்சுடைய மஹா பாபி என்றா? அது வாஸ்தவம்தான். டாக்டர் உன் உயிருக்கு ஒரு வித அபாயமுமில்லை

என்று சொல்லியிருக்கிறார். ஆகையால் வீணெண்ணங்கொண்டு கலங்காதே. உனக்கு உடம்பு மிக துர்ப்பலமாயிருக்கிறபடியா லதிகம் பேசவேண்டாம்" என்றனன். அவள் சிறிது தாகத்திற்குத் தண்ணீர் கேட்கவே கொஞ்சம் வெந்நீர் கொண்டுவந்து கொடுத்தனன். பிறகு அவள் சற்று உறங்க, முரளீதரனும் ஸ்வல்பம் கண்ணயர்ந்தனன். பின்னர் ஒரு மாதத்தில் நீலாம்பாளுக்கு உடம்பு பூர்ண சொஸ்தமாயிற்று. ஆனால் எழுந்து நடமாட இன்னஞ் சில தினம் போக வேணுமென்று டாக்டர் சொன்னார். இனிமேல் தன்னுடைய பார்வை அவளுக்கு அனாவசியம் என்றும்,தேகத்தில்திடம்வரக்கூடிய மருந்தும் ஆகாரமும்தான் இனி அவளுக்குதேவையாகையால்,அவைகளைக் கவனித்துக் கொடுக்கும்படியும் உரைத்தனர். பெயர் பெயராய் எல்லாரிடத்திலும் உத்தரவு பெற்றுக்கொண்டு அவர் வீட்டிற்குப் புறப்படும் சமயத்தில் சங்கரநாராயணய்யர் ஐந்நூறு ரூபாய் களடங்கிய நோட்டை ஒரு கவரில் போட்டு, அவரிடம் நீட்டி "ஸார், தாங்கள் பட்ட சிரமத்திற்கு இது ஒரு கைம்மாறு இல்லாவிட்டாலும், தயவு செய்து அங்கீகரிக்க வேணும்" என்றனர். அன்னவர் அதைக் கைப்பற்றுமலே நகை முகத்துடன், "இல்லை இல்லை. ஒரு போதும் இதை வாங்கிக்கொள்ள நான் தயாராயில்லை" என்றனர். இவ்வார்த்தையைக் கேட்ட ஐயர் அவரின்னம் அதிக தொகையை அபேக்ஷிப்பதாக எண்ணி, தன்புத்திரனை யொரு முறை நோக்கிவிட்டு மறுபடி அவரைப் பார்த்து "தங்களுடைய அபேக்ஷைதான் என்ன என்பதைத் தெரிவித்தால் கூடிய வரையில் தங்களை திருப்திப்படுத்த முயற்சி செய்கிறோம்" என்றார். இதைக் கேட்ட வைத்தியர் நகைத்து "ஐயா, நான் இதற்கு முன்னமே தங்களிடத்திலிருந்து விலை மதிக்காத ஒரு பொருளைப் பெற்றிருக்கிறேன். ஆகையால் அது விஷயமாய் தங்கள் குடும்பத்திற்கு நான் கடமைப் பட்டவனாக யிருக்கிறேன். அதனுடனிதையும் ஏற்றுக் கொண்டா லென்னைப்போல் பேராசைக்கார னிவ்வுலகில் இரான்"என்றனர். விடுகதையைப்போன்ற இவ்வுரையைக் கேட்ட எல்லாரும் சங்கதியறிய மாட்டாதவர்களாய் 'திரு' 'திரு' வென்று விழித்தனர். இவர்கள் அவஸ்தையையறிந்த அவ்வுபகாரியும் அடக்க முடியாத பெருஞ் சிரிப்புடன், "ஏனிவ்விதக் கலக்கம்? நான் ஆரென்று தெரியவில்லையா? பாலசந்திரனல்லவா நான்?" என, எல்லாரும் அப்பொழுது தான் தூங்கி விழித்தனர். "ஐயோ எனக்குத் தெரியவில்லையே" யென்பாரும், "முன்னைக்கிப்போது ரூபம் வேறே மாதிரியாயிருக்

கிற” தென்பாரும், “அப்போது குழந்தை, இப்பொழுதுவயது ஆண் பிள்ளையா யிருப்பதுடன் மீசை வைத்துக்கொண்டு தலை கத்தரிச்சுக் கொண்டிருக்கிறான். அது தான் அடையாளந் தெரியவில்லை” யென்பாரும் பலதினுசாய்ப் பேசிக்கொண்டார்கள். ஐயர் மருமகனை, “இனி மேலுமா வீட்டிற்குப் போகவேணு” மென, அவர் “இல்லை, இன்று மத்தியானம் என் தாய்தந்தை முதலியோர் தங்கள் குமாரத்தியை அழைத்துக்கொண்டு வருகிறதாக எழுதியிருக்கிறார்கள். ஆகையால், அவசியம் போகவேணும், சாயரக்ஷை எல்லாரையும் அழைத்துக் கொண்டு வருகிறேன்” என்றுரைத்துப் போயினன். அவ்விதமே சாயந்திரம் ஸர்வத்ராளும் ஒன்றுகூட சமயம்வாய்த்தது. ராஜம் தன தன்புள்ள மதனியைக்கட்டிக்கொண்டு மிகவும்ஆருமையுடன் கதறினாள். நீலலோசனிக்கும் மட்டற்ற அன்புள்ள நாத்தனாரைக் கண்டவுடன் துயரம் பொங்க, மிக வாஞ்சையுடன் சேர்த்து அணைத்துக்கொண்டு விம்மினாள். இவர்கள் நேசத்தைக் கண்ட மற்றவர் யாவரும் வியப்பெய்தினர். இன்னம் சிறிது காலம், அதாவது பொற்கொடியாகிய நீலலோசனிக்கு எழுந்து நடமாடப் போதுமான இடம் வரும்வரையில், எல்லாரும் கல்யாணம்போலக் கோலாஹலமாய் அங்கேயே இருக்கவேணு மென்று ஏற்பாடாயிற்று. அலமேலுவை எங்கேயோ வெளியில் அதிகமாய்க் காணோம். தன்வினை தன்னைச் சுடுமென்பதற் கேற்ப, அவள் மனம் அவளை வாதிக்கின்றது போலும்!

## பதினேழாம் அத்தியாயம்

### கலக்கமற்ற காலம்: பொறுமையின் பெருமை

காலை சுமார் ஒன்பது மணி. மைலாப்பூரிலுள்ள கச்சேரிரோட்டில் கச்சிதமாய்க் கட்டப்பட்டுச் சுற்றிலும் கைப்பிடிச்சுவர்களுடனும் முன்பக்கத்தில் வாழைகள் நெருக்கமாய் வைத்து வளர்க்கப்பட்டிருப்பதனால் ரமணீயத்தோற்றத்துடனும் கூடிய ஒருபங்களாவின்மாடியின் முன் தாழ்வாரத்தில் தொட்டிகளில் ரோஜா, தவனம், மருவம், குடமல்லிகை முதலிய சுகந்த பரிமள புஷ்பங்களோடு கூடிய செடிகளும் பூஜார்ஹமுள்ள வகை வகையான காசித்தும்பைச்செடிகளும் நெருக்கமாக வைக்கப்பட்டிருந்தன. பார்வைக்கு மிக்க அலங்கார ஆனந்தத்துடன்விளங்கிற்று. அதற்கடுத்தாப்போல் அதிவிநோதமாய் சிங்காரித்திருந்த ஹாலில் ஒரு ஸௌந்தராங்கி பரிமளத் தைலங்களிட்டு ஸ்நாநம் செய்த தனது அடர்ந்த அழகிய கருங்கூந்தலை மெல்லிய விரல்களால் கோதிச் சிக்கெடுத்துக்கொண்டு அங்கிருந்து மேற்படி தாழ்வாரத்துக்குச் செல்லும் வழியில் ஒரு நாற்காலியிலமர்ந்து, அப்புஷ்பங்களின்மீது பட்டுவருவதனால் உண்டாகும்சுகந்தத்துடன்கூடிய காற்றின் நலத்தை யனுபவித்து, மனோஹரமாய் விளங்கும் அம்மலர்க்குழாங்களை மாற்றி மாற்றி நோக்கிக்கொண்டும் உட்கார்ந்திருந்தனள்.

அவள் மாசற்ற மனம் யாதொரு கவலையிலும் சம்பந்தப்படாமல் நிர்மலமாயிருப்பதை அவளது பிரகாசம் பொருந்திய மதிவதனம் வெளியிட்டது. இவளிப்படியிருக்க இவ்வித வைபவத்தைக் கண்ணுற்றோர் மனதில் எப்படியும் அவ்வீட்டிற்குரியான் பெயரறிய விருப்பம் உண்டாவது அதிசயமல்ல. அதற்காக அவர்கள் அதிகம் கஷ்டப்பட வேண்டியதில்லை. அக்கட்டடத்தின்முன்னணியிலுள்ளஒருகற்றூணில் மாட்டியிருக்கும் பலகையில் "எஸ். முரளீதர ஐயர், ஹைகோர்ட் வக்கீல்" என்று தீட்டியிருப்பதைப் பார்த்தால் தெரிந்துகொள்வார்கள்.

ரமணீமணியாகிய நீலலோசனி தனியாய் அமர்ந்திருக்க அந்த மோஹனாங்கியின் தளம்போன்ற நயனங்களை கைகளால் மூடியதறிந்த அச்சுந்தரி, "நாதா! எப்போதும் என்ன விளையாட்டு! கையெடுங்கள். ஒரு செய்தி சொல்லுகிறேன்" என்றாள். முரளீதரன் நகைத்து "அடேப்பா! செய்தி என்றால் பயமாயிருக்கிறதே! என்ன! சொல்லு பார்க்கலாம்" என்றனன். அதற்குள் தன் காதலன் அமர, மற்றொரு

நாற்காலியெடுத்து வந்து அங்கு போட்டனள். அவளிஷ்டம் போல அவனதிலிருந்தனன். அப்பொழுதும் அருகிலுட்கார்ந்து, "கால் மணிநேரமாய் இந்த புஷ்பராசிகளையே நோக்கிக்கொண்டிருக்கிறேன். எனக்கு சலிப்பு உண்டாகவே இல்லை. செடியிலிருக்கும் வரையில் அவைகள் எவ்வளவு ஆனந்தகரமான தோற்ற முள்ளவைகளாகக் காணப்படுகின்றன. பகவானுலவைகளுக்கு அனுக்கிரஹப்பட்டிருக்கும் பூர்ண அழகுடன் காற்றில் அலேவுண்டு மெதுவாய் அசைவதினுல் உண்டாகும் மனோஹரத் தோற்றத்திலிருந்து கிரஹிக்கும் விஷயங்களை அறிவு முதிர்ந்தவர் பல தினுஸாய் வர்ணிக்க முன் வருவார்களென்றுலும் என்போன்ற பேதைகளுக்குப் பார்த்தானந்திக்கும் தன்மையை விட, வேறென்ன தெரியப்போகிறது! செடியில் இருக்கும் வரையில் அதனுடைய நிலைமையைப் பார்க்கப் பார்க்க அதிக விருப்பத்தைக் கொடுக்கிறது. அதனின்றும் பறித்துச் சற்று நேரம் போனுல் நிறம் மாறிப்போகிறது. இது மாத்திரமல்ல. ஸகலமும் நிலைகெட்டுப்போனுல் அப்படித்தான். இதற்கு அதிக தூரம் போகவேண்டாமே. இதோ பாருங்கள்! தங்களோடு வஸிப்பதனுல் எனக்கு இருக்கும் சகல விதமான பெருமைகளும், முன்னெருக்கால் தங்களைப் பிரிந்திருந்தபோது இருந்ததில்லை. ஆகையால் நாமும், இச்செடியும் மலரும் போலவே என்பதைப்பற்றி என் மனம் யோசித்திருந்தது" என்றுள். முரளீதரன் இவளுரைத்ததைக்கேட்டு அமர்ந்திருந்தானே ஒழிய, ஒன்றும் பதில் கூறவில்லை. ஏதோ ஒரு விஷயத்தைச் சிந்தித்திருந்தான். இதைக்கூறி முடித்தவள், எழுந்து சென்று அழகாகவும் பெரிதாகவும் புஷ்பித்திருந்த ரோஜாமலரில் ஒன்றைப் பறித்து வந்து முரளீதரன் கரத்தளித்தனள். அவனும் அதை ஏற்று, "கண்ணே! இங்கேவா, இப்படி உட்கார். இதுதான் கடைசிமுறை உன்னை நான் கேட்பது. நீ நிஜத்தைச் சொல்லாவிடில் உள்ளபடி எனக்கு உன் மீது மிக்க ஆயாஸமாக இருக்கும்" என்றுன்.

நீலா. ப்ராணேசா! கடந்துபோன விஷயத்தை எதற்காக மறுபடி ப்ரஸ்தாபிக்கவேணும் என்றே தவிர, தங்களுக்கு சொல்லக்கூடா தென்பதொன்றும் எனக்கில்லை.

முர. பெண்ணே? அதைத்தான் நான் அறிந்தாலென்ன தப்பு

நீலா. தப்பொன்றுமில்லை நாதா! வீண் மனஸ்தாபம் தானே

முர. இப்போது மனஸ்தாபமில்லாமலிருக்கிருளாக்கும்; உனக்கென்ன சொல்லென்ருல் சொல்லேன்.

நீலா. ஏது? சொன்னுலொழிய இன்று சரிப்படாது போலிருக்கிறது.

முர. ஆமாம் நீ சொன்னுலொழிய இன்று சாப்பிடுவதில்லே.

நீலா. இந்தப் பிடிவாதம் நன்ருய் இருக்கிறது, சின்னக் குழந்தையைப்போல!

முர. பெண்ணே, சும்மாப் பேச்சை வளர்த்தாதே. அவர்கள் வந்துவிடுவார்கள்.

நீலா. நாதா ! யார் வரப்போகிருர்கள். சொல்லுங்கள். பிறகு சொல்லுகிறேன்.

முர. பொற்கொடி! நீ பலே ஸாஹஸி. எந்தவிதம் ஏமாறுவேனென்று பார்க்கிருய்? ராஜமும் பாலசந்திரனும் நடராஜனும் அவன் மனேவியும் வருகிருர்கள்.

நீலா. ஆனுல் நான் கீழேபோய் அவர்களுக்கும் சாப்பாடு தயார் செய்யச் சொல்லுகிறேன்,

என்றெழுந்திருக்க, முரளீதரன் அவள் கைப்பற்றி,

"நான் மேலேவரும்போதே சொல்லிவிட்டுவந்தேன். அதற்காக நீ போக வேண்டாம்" என்ருன். என்னசெய்வதென்று மறுபடியுட்கார்ந்து "நாதா ! தாங்கள்தான் சரியாய் ஊஹிக்கின்றீர்களே ! மறுபடி என் வாயால் ஒருதரம் சொல்லவேண்டுமா ?

முர. நான் எண்ணுவது சரியாயிருந்தால் எதற்காக அவ்விதம் செய்யவேணுமென்பது தெரியவேண்டாமா ?"

நீலா. ஒருநாள் சாயந்திரம் வழியில் கால் நீட்டிப் படுத்திருந்தேன்; அது பிசகுதானே. அவ்விதம் மறுமுறை செய்யாமலிருக்க வேண்டி, சித்தியம்மா புத்தி கற்பித்தார்கள்.

முர. கண்மணீ ! எவ்வளவு சுலபமாய்ச் சொல்லுகிருய் ! புத்தி புகட்டும் மாதிரி மாத்திரம் மிக நன்ருயிருக்கிறது. இப்போது அவளேச் சொல்வதா? உன்னேச்சொல்வதா? வென்று எனக்குத் தெரியவில்லே. அவள் செய்தது சரிதான் என்று நீ ஒப்புக்கொள்கிருயே. அவளேவிட நீ பொல்லாதவள்.

நீலா. (நகைத்து) "போகட்டும். தங்கள் நல்லதனத்தில் கொஞ்சங் கொடுத்துவிடுங்கள். சரியாய்ப் போய்விடும். போதும் இந்தப்

பேச்சு. வண்டிசப்தம் கேட்கிறது. எல்லோரும் வருகிறார்களோ என்னமோ? சாப்பாட்டிற்கு நாழிகை ஆய்விட்டதோ? மணி பத்திருக்கும் போலிருக்கிறதே,'' என்றுரைத்துக் கொண்டிருக்கும்பொழுது பாலசந்திரனும் ராஜமும் வந்தனர். பிறகு நடராஜன் அவன் மனைவி கல்யாணியுடன் வந்தனன். எல்லோரும் மிக சந்தோஷத்துடன் சிறிது நேரம் வார்த்தையாடிப் பின்னர் திவ்யாஹாரத்தை புருஷர்களொருபுறமும் ஸ்திரீகளொருபக்கமுமமர்ந்து குதூஹலமாய்ப் பேசிக்கொண்டே உட்கொண்டனர். இவர்கள் கோஷ்டியில் அதிகமாய் 'நாணல் கோணல்' ஏற்படவில்லை. ராஜம், முரளீதரனைப்போலவே நடராஜனும் என்று அவள் குழந்தைப்பருவமுதல் எண்ணியிருந்தபடி, இப்பொழுதும் கருதியிருந்தாள்.

நீலலோசனி நடேசனைத் தனது கல்யாண காலத்திலிருந்து தன் அன்பனுடைய தம்பியைப் போலவும்,பாலசந்திரனை தனக்கவன் வைத்தியம் பார்த்தகாலந்தொட்டு தனது ஜ்யேஷ்ட ப்ராதாவாகவும் நினைத்தபடி இப்பொழுதும் எண்ணினாள். களங்கமற்ற மனமுடைய கல்யாணியொருத்தியே அன்னிய விடத்துப் பெண்ணாகையால் சற்று ஒதுங்கி நிற்கும் ஸ்வபாவமுள்ளவளாகக் காணப்பட்டாள். பிறகு தனது காதலனது கட்டாயத்தினால் மற்ற இருவரையும் 'அண்ணா' வென்றழைக்க ஆரம்பித்தாள்; முரளீதரனுடனேயே நடராஜனும் வக்கீல் வேலையில் பிரவேசித்தனன்.

பாலசந்திரன் சொந்தமாய் வைத்தியம் செய்துகொண்டு முரளீதரன் க்ருஹத்தருகில் ஒரு பங்களாவில் வஸித்துவந்தான்.

மலரும் மணமும்போல மாறாத நேசமுள்ள மூன்று தம்பதிகளும் அடிக்கடி ஸந்திப்பதும், விருந்துசெய்வதும், வேடிக்கைகள் பார்க்கச்செல்வதுமாய்க் காலத்தை வெகு விநோதமாய்ப் போக்கலானார்கள். நீலலோசனிக்கு முரளீதரனைப்போல ஐந்தச்சும் பாவனையுமுள்ள ஆண்குழந்தையொன்றும் பெண்குழந்தையொன்றும் பிறந்து, பகவானருளால் க்ஷேமமாய் இருக்கிறதாகக் கேள்வி. ராஜத்திற்கு ஓராண் குழந்தையும், கல்யாணிக்குக் கண்மணிபோன்ற இரண்டாண் குழந்தைகளும் பிறந்தன. எல்லோரும் கவலையற்று வஸிக்கும்பொழுது நமக்கென்ன கவலை? மற்றொன்றுமில்லை, அலமேலு எப்படியிருக்கிறாளென்பதே. சீ, முன்னைக்கிப்போது எவ்

வளவோ குரூரம் குறைந்துபோயிற்று. தெய்வபக்தி மேலிட்டது. ஆனால மனதில் மாத்திரம் வாதனை வாதனையே! என்னசெய்யலாம்.

தாய்தந்தையர்கள் எப்பொழுது வந்தாலும் சில நாள் தங்கிப் போவதுண்டு. ஆனால் சங்கரநாராயணய்யர் வேலையிலிருந்து நீங்கிய பிறகு நிரந்தரமாய் முரளீதரனிடமே வசித்துவந்தார். அச்சமயம் அலமேலு கடையில்போட்டு மாற்றிய மாதிரி, நீலாம்பாளிடம் முழு ப்ரியத்தையும் காட்டி நடந்துவந்தாள். வெங்கடேச்வரய்யர் வயது சென்ற பிறகு, நாகையிலிருந்த க்ருஹத்தை விற்றுவிட்டுப் பெண் வசிக்குமிடத்தருகில் ஒரு சிறிய வீட்டை விலைக்கு வாங்கி அதில் வஸித்துவந்தார். கோபாலகிருஷ்ணன், விஜயலக்ஷ்மியென்னும் நீலலோசனியின் செல்வக்குழந்தைகள் ஸதாகாலமும் அவருடன் இருந்து வந்தார்கள்.

செல்வத்திற் பிறந்து மிகச் செல்வமாக வளர்ந்த பெண்கள் சிரோமணியாகிய நீலலோசனி தனது சிறுவயதில் எண்ணரிய கஷ்டங்களை யனுபவித்து தெய்வபக்தியிற் சிறந்து பதிவாக்ய பரிபாலனமே தனக்கு முக்ய வ்ரதமெனத் தேர்ந்து, பொறுமை யென்பதை ஒரு வ்ரதம்போலனுஷ்டித்து, உயிர்போகும் என்று எண்ணக்கூடிய காலத்தும் கண்கலங்காதிருந்த கண்ணியத்தோற்றத்தை என்ன விதமாய்ப் புகழ்ந்துரைத்தாலும் போதாதென்றே தோன்றுகிறது. ஸஹோதரிகாள்! பொறுமையே உலகில் யாவரும் கொண்டாடும் மேன்மையான வஸ்து. பொறுமையே நமக்குக் காப்புப்பொருள். பொறுமையே அழகு தரும் ஆபரணம். மற்றும் பொறுமையை கைப்பிடித்தார்க்கு ஒரு குறைவும் வாராமல் காப்பாற்றி ஈசன் எப்பொழுதும் அருள்புரிவர்.

நமது ஸஹோதரியாகிய நீலலோசனிக்கு அவள் பொறுமையே ஸகல பாக்யத்தையும் கொடுத்துக் களிக்கச்செய்தது. ஆதலால் நாமும் கூடியவரையில் அதை அனுஷ்டித்து அதனால் உண்டாகும் நற்பயனை அடைவோமாக.



# மரகதவல்லி

(துரைத்தனத்தார் அங்கீகரித்தது.)

பஞ்சரத்தினம் என்னும் அரிய நூலின் ஆசிரியரான ஸ்ரீமான் ப. சி. கோவிந்தஸாமி ராஜா அவர்கள் இயற்றியது. கதையமைப்பு நவீனக லக்ஷணத்தை முழுதும் அநுசரித்ததா யிருக்கின்றது. இந்நூல், ஆண் பெண் இருபாலாரும் படிக்கத்தக்கது. வீண் செருக்குடையவர் வருந்துவ ரென்பதும், பொய்க்கல்வி கற்பதில் பயனில்லை யென்பதும், இன்னபிற உலகியல்பும் உதாரணமுகமாக இந்நூலுள் விளக்கமாகக் காட்டப்பட் டிருக்கின்றன. இந்நூல் ஏழை, பணக்காரர், சிறியவர், பெரியவராகிய ஒவ்வொருவ ரிடத்தும் இருந்தே தீரவேண்டும். விலை அணா **12**.

சில முக்கிய அபிப்பிராயங்கள்

**ஸ்ரீமான் தி. செல்வக்கேசவராய முதலியாரவர்கள், எம். ஏ.**—** *மரகதவல்லி உண்மையில் நடந்தவாறு எழுதப்பட் டிருக்கிறது. சோகரசம் கலந்து என் கண்களில் நீர் வடியச் செய்தது. நான் பார்த்த அற்புதமான இரண்டொரு கதைகளில் இது ஒன்றுகுமென உறுதியாய்க் கூறுவேன்.*

**ராவ் பஹதூர் ஆ. தனக்கோடி முதலியாரவர்கள்.**— * * *இந்நூல் ஏழை, பணக்காரர், சிறியவர் பெரியவராகிய ஒவ்வொருவரிடத்தும் இருந்தே தீரவேண்டும்.*

**ஸ்ரீமான் எஸ். அனவரத விநாயகம்பிள்ளை அவர்கள், எம். ஏ., எல். டி.**—* * *கதையமைப்பு நவீனக லக்ஷணத்தை முழுதும் அநுசரித்ததா யிருக்கின்றது. இந்நூல் பெண்களெல்லாம் கற்றுணரத்தக்கது.*

**திவான் பஹதூர், கனம் ஏ. சுப்பராயலு ரெட்டியாரவர்கள்.**— * * *நம் பெண்மக்கள் படிக்கவேண்டிய கதை இதுவே யாகும். நடையும் கருத்தும் பரிசுத்தமாயும், படிப்பவர் மனம் பதியுமாறும் எழுதப்பட் டிருக்கிறது.*

**ஸ்ரீமான் தி. த. கனகசுந்தரம் பிள்ளை அவர்கள், பி. ஏ.**— * * *காலஞ்சென்ற மிஸ்டர் ப. சி. கோவிந்தசாமி ராஜா இயற்றிய மரகதவல்லி என்னும் கற்பனைக் கதையைப் படித்துப் பார்த்தேன். இதுவரை வெளிவந்துள்ள தமிழ்க் கற்பனைக் கதைகளுள் மரகதவல்லிக்கு ஈடானவை ஒன்றுமில்லையென்றே சொல்லவேண்டும். கதை இனிமையா யிருப்பதுடன் அதனால் போதிக்கப்படும் நீதி மிகச சிறந்தது. இப்புத்தகம் எளிய நடையில் எழுதப்பட் டிருப்பதோடு, ஸெகிண்டரி பள்ளிக்கூடங்களில் உயர் வகுப்புகளுக்கு உப பாடமாக வைக்கத் தகுந்ததா யிருக்கிறது.*

**வி. கனகசபைப் பிள்ளை அவர்கள், பி. ஏ., பி. எல்.**— * * * *நடை இனியதும் பரிசுத்தமா யிருப்பதுடன், கதை இனிப்பாயும் அழகாயுமிருக்கிறது. இதை வாசிக்கும் ஆண் பெண் பயனடையத் தவறார்.*

**ஸர். டி. சதாசிவ ஐயரவர்கள், ரிடயர்ட் ஹைகோர்ட் ஜட்ஜ்.**— * * *இனிய தமிழிலெழுதப்பட்டு நல்லவருடைய கூட்டுறவு துன்மார்க்கரைத் திருத்தவல்ல தென்பதை விளக்குகிறது. இதில் ஆய்ந்தோய்ந்து பாராது, அவசரத்தில் கொள்ளும் போலிக்கொள்கைகளை நீக்கி, நம்மவரிடமுள்ள உண்மையான குறைகளைக் காட்டியிருக்கின்றன.*

---

*விலாஸம் :— அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.*

# கற்பின் வெற்றி

அல்லது

## விக்ரமசிங்கன் கோட்டை மர்மம்

இப்புதிய நாவல் பெயர்பெற்ற துப்பனான ஷண்முகசுந்தரத்தின் துப்புத்திறத்தை நன்கு விளக்கிக் காட்டுகிறது. ஆரம்பத்தில் எவரும் பிரவேசிப்பதற் கரிதான கருங்கற் கோட்டையில் காவற்காரன் எஜமானியைக் கொன்றதாகத் தெரியவருகிறது. அச்சந்தர்ப்பத்தில் ஷண்முகசுந்தரம் அழைக்கப்பட்டு, அந்த அம்மாள் இறக்கவில்லையென்று அறிந்து அவளை உயிர்ப்பித்து, காவற்காரன் குற்றவாளியல்லவென நிரூபித்து, அப்பிராந்தத்தில் பேர்பெற்ற கொள்ளைக்காரனான சிங்கமாமுகனைத் தொடர்ந்து, அவன் தாசியை மயக்கி அவன் இருப்பிடத்தை யறிந்து, சந்நியாசிவேடம் பூண்டு சிங்கமாமுகனுக்குச் சிகிச்சைசெய்யச் சென்று, அப்போது தன் மந்திரசக்தியால் தீரனான சிங்கமாமுகனை யடக்கி வீழ்த்தி, அவனைக் கொல்ல முயன்ற துருக்க சந்நியாசி யொருவனைத் தன்னுடைய நிகரற்ற மந்திர சக்தியால் அடக்கி, சிங்கமாமுகன் பூண்ட பல வேடங்களையும் துருக்க சந்நியாசியின் வேடத்தையும் எளிதில் ஊகித்து, அந்த அம்மாளது கணவனை துருக்கச்சந்நியாசியையும், சகோதரனை சிங்கமாமுகனையும் சிநேகப்படுத்தி, கற்பின் அவதாரமான அந்த அம்மாளது கற்பைச் சந்தேகித்து, ஆராயாது செய்த செய்கைகளினால் யாவருமுற்ற துயரத்தை எடுத்துக்காட்டுகிறான். மிகவும் எளிய நடை. எடுத்தவர் படித்துமுடிக்காமல் கீழேவைக்க முடியாது. விலை ரூபா ஒன்றுதான். நான்கு அழகிய ஆப்டோன் படங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

### விஷய அட்டவணை



### சித்திரப் படங்கள்



இதைப்பற்றிய முக்கிய அபிப்பிராயங்களுக்கு அடுத்த பக்கம் பார்க்கவும்.

# சில முக்கிய அபிப்பிராயங்கள்

**சுதேசமித்திரன்.**— தமிழ் உலகில் தற்காலம் எண்ணிறந்த கதைப் புத்தகங்கள் உலவிவரினும் அவைகள் பலவற்றில் சாதாரணமாகக் காணப் படும் சொற்குற்றம், பொருட்குற்றமின்றி இப்புத்தகம் விளங்குவது மிகவும் பாராட்டத் தக்கதேயாம். * * எல்லாவற்றிலும் ஸ்திரீகளுக்கு முக்கிய ஆபரணமாகவுள்ள கற்பின் மகிமையையும், அதைக் கடைப்பிடித்தோ ருக்கு எத்தனை இடுக்கண் நேரிடினும், முடிவில் அவர்களுக்கு வெற்றியே ஏற்படுமென்பதையும் நிரூபித்து இக்கதை எழுதப்பட்டிருக்கிறது * * படிக்கப் படிக்க அறிவையும், தெய்வபக்தியையும், கற்பின் மகிமையையும், பசுமரத்தாணிபோல், மனதில் பதிக்குமாறு இப்புத்தகம் எழுதப் பெற் றிருப்பதால், இதனைப் படிப்போர் பயனுறுவார்களென்பதில் சந்தேக மில்லை. உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் எழுத்துப் பிழையின்றி அச்சிடப் பட்டிருக்கிறது.

**ஸ்ரீமான் வா. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள, எம். ஏ.**— * * கற்கண்டின் சுவைபோல கதையின் சுவையும் ஒரே தன்மையதாய் முதலி லிருந்து இறுதிவரையும் நன்கு அமையப்பெற்றுளது. இந்நூலில் முக்கிய புருஷனான ஷண்முகசுந்தரத்தின் துப்பறியும் திறமும், பக்தியின் சிறப்பும், உத்தம குணங்களும் படிப்பவர் மனதைக் கவர்ந்து இன்பம் விளைவிக் கின்றன.

**தேசபக்தன்.**— * * தெள்ளிய நடையில் எழுதப்பெற்று, பல சித் திரப்படங்களோடு கூடியது. * * ஒவ்வொருவரும் இதனை வாங்கி அவசியம் வாசிக்கவேண்டியதே.

**இந்து நேசன்.**— * * முதலிலிருந்து ஈறுவரையில் கதையிற் கூறி யுள்ள சம்பவங்கள் படிப்போர் மனதைக் கவரத்தக்கனவா யிருக்கின் றன. * * இனிய தமிழில் எழுதப்பட்டுள்ளது. இந்நூல் தமிழறிவோர் யாவரும் படித்தானந்திக்கத் தக்கது என்று பூரணமாய் நம்புகிறோம்.

**சுதேச பரிபாலினி.**— * * தற்சமயம் வெளிவந்துலவும் துப்பறியும் நாவல்களுள் இது மிகவும் சிறந்ததென்றே கூறவேண்டும். * * துப்பறி யும் சமர்த்தர் (ஷண்முகசுந்தரம்) எடுத்துக்கொள்ளும் கஷ்டம் படிப்போ ருக்கு அளவில்லா ஆனந்தத்தையும் ஆச்சரியத்தையும் ஒருங்கே அளிக்குந் தன்மையில் இருக்கின்றது. புத்தகத்தைக் கையிலெடுப்போர், முடிவு காணும் வரையில் கீழே வைக்கமாட்டார். இடையிடையே அரிய பல நீதிபோதனைகளும், பக்திமார்க்கங்களும் காட்டப்பட்டிருக்கின்றன.

**கதாரத்னகரம்.**— * * கற்பிற் சிறந்த காந்திமதியை அவள் புருஷன் வெகுவாக சம்சயித்து, அவளுக்குப் பல கேடுகளை விளைவிக்க முயன்றும் கடைசியாக, கற்பு வெற்றிபெற்றதை ஆசிரியர் வெகு அழகாக எழுதி யிருக்கிறார்.

---

விலாஸம் :— அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

# முரளீதரன்

(ஓர் இந்திய மாதால் எழுதப்பட்டது.)

மிகவும் ஆனந்தத்துடன்! எல்லோரும் கருதக்கூடிய மாசற்ற இளம் பருவத்தின் இன்பமும், நம் மதத்திற்குரிய சிறந்த விவாக விமரிசைகளும், அவ்விவாக காலத்தில் ஏற்படும் கோலாகலங்களின் அழகும், ஜகத் ரக்ஷியாய், ஸகலஜீவ தயாபரியாய் ஜகன்மாதாவாய் விளங்கும் ஈசுவரியின் சிறப்பும், அவளது பக்தியிலீடுபட்டு நிற்கும் பக்த கோடிகளின் உயர்வும், கடற்கரைக் காட்சியும், உண்மை நட்பின் பெருமையும், ஊராருடன் வீண் வம்பு பேசுவதனால் வரும் தீங்கும், அன்புள்ள காதலர்களின் மனோநிலையும், பொறுமையின் சிறப்பும், எளிய நடையில் சிறுமியர் உத்ஸாகத்துடன் வாசிக்கும் வண்ணம் எழுதப்பட்டிருக்கின்றன. ஆப்டோன் சித்திரப்படங்களும் கொண்டது. விலை அணா 10.

---

# தேடாத செல்வம்

ஆண் பெண் இருபாலாரும் எளிதில் அறியும் வண்ணம் எளிய செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளது. தற்காலத்து வெளிவரும் அநேக கதைப் புத்தகங்கள் போன்றிராமல் உலக நடையைப் பெரும்பாலும் தழுவி, எல்லா வகுப்பினருக்கும் அறிவூட்டக் கூடியது. பாடசாலைகளில் கற்கும் மாணவர்களுக்கு மிகவும் உபயோகமுள்ளது. சோம்பலின் தீமையும், சூதாட்டத்தின் முடிவும், லாட்டரி சீட்டின் சூதுகளும், வீண்வம்பளப்போர் அடையும் கதியும், பொறுமையின் பெருமையும், அதிர்ஷ்ட விசித்திரத்தின் அமைப்பும் செவ்வனே வர்ணிக்கப்பட்டுள்ளன. விலை அணா 3.

---

# குண்டலகேசி

அல்லது

## தற்கொல்லியை முற்கொன்றவள்

தமிழ் மொழியிலே "பஞ்ச காவியங்கள்" என்று கற்றோரால் பெரிதும் பாராட்டப்படும் நூல்கள் சிந்தாமணி, மணிமேகலை, சிலப்பதிகாரம், வளையாபதி, குண்டலகேசி என்பனவாம். இவற்றுள் ஒன்றான குண்டலகேசி என்னும் நூல் இக்காலத்தில் இல்லை; பண்டைக் காலத்திலேயே அஃது இறந்தொழிந்தது போலும். ஆனால், இந்நூல் எதைப்பற்றிக் கூறுவதென்பது, இப்போது காணப்படும் சில செய்யுட்களைக் கொண்டும், பிற சாதனங்களைக்கொண்டும் ஒருவாறு அறியக்கிடக்கிறது. அவைகளை ஆதாரமாகக்கொண்டு நாகை ஸ்ரீ கோபாலகிருஷ்ண பிள்ளை இந்நாவலை மிக உயர்ந்த செந்தமிழ் நடையில் எழுதியுள்ளார். இது சரித்திர சம்பந்தமான நாவலாகும். பௌத்த தர்மங்களைப்பற்றியும் இந்நாவல் விவரித்துக் கூறுகிறது. இந்நாவலின் கம்பீரமும், அழகும் வாய்ந்த இனிய வசன நடை, படிப்போர் மனதைப் பெரிதும் பரவசப்படுத்தும்படியான வகையில் அமைந்திருக்கிறது. விலை அணா 5.

---

விலாசம் :—அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

# பஞ்சரத்தினம்

துரைத்தனத்தார் அங்கீகரித்தது

மணாளனைத்தவிர மற்றொருவரை மனத்திலும் நாடாத உருக்குமணி, நமனிடமிருந்து நாயகன் உயிரை மீட்டுவந்த சாவித்திரி, காதகர் கையிற்சிக்கிக் கஷ்டப்பட்ட காலத்தும்கற்பைக் காத்து வந்த சீதை, தந்தை வீட்டில் எல்லாச் சம்பத்திருந்தும் காதலன் பிரிந்த துக்கத்தால் தரையே படுக்கையாகவும், கந்தையே ஆடையாகவுமெண்ணிக் காலங்கழித்து வந்த தமயந்தி, கள்ளமென்பதை எள்ளளவும் உணராத தன்னைக் கூடிப் பிரிந்து ஆண்டுகளாயும் கணவன் வருமளவும் காத்திருப்பதே கடனெனக்கொண்ட சகுந்தலை முதலிய புண்ணியவதிகளின் சரிதங்கள் கொண்டது.

ஹைகோர்ட் ஜட்ஜ் திவான் பஹதூர் கனம்

ஸி. வி. குமாரசாமி சாஸ்திரியாரவர்கள் முன்னுரையுடன் கூடியது.

ஐந்து அழகிய ஆப்டோன் படங்களுடன் விலை அணா **12**.

இதைப்பற்றிய சில முக்கிய அபிப்பிராயங்கள்.

**சுதேசமித்திரன்.**—* * இப்புத்தகத்திற்கு அமைந்த மகுடம் சாலவும் பொருத்தமானதென்றே சொல்லலாம் * * இவ்வரிய நூலைக் கல்விச்சாலைகளில் பாடபுத்தகமாக அதிகாரிகள் ஒப்புக்கொண்டிருப்பதை நாம் பாராட்டுகிறோம். * * ஸ்திரீ புருஷர்கள் இருவரும் யாதொரு வித்தியாசமுமின்றி படிப்பதற்கேற்ற புத்தகம் இதுவே. பாலிகா பாடசாலைகளில் இதை முக்கிய பாட புத்தகமாக ஏற்படுத்தல் சகல விதத்திலும் பொருந்தும். இனிய நடையில் யாவரும் எளிதில் அறிந்துகொள்ளுமாறு எழுதப்பட்டிருக்கிறது. அங்கங்கே உருவப்படங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. உயர்ந்த கடிதத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றது.

**தேசபக்தன்.**— * * பஞ்சரத்தினத்தின் உள்ளுறை பொன்னே போல் போற்றத்தக்கது. இந்நூல் படிப்போர் உள்ளங் கவருமாறு செவ்விய நடையில் எழுதப்பட்டிருக்கிறது.

**இந்து நேசன்.**—இவ்வினிய புத்தகம் ஸ்திரீ ரத்தினங்கள் ஐவரின் சரித்திரத்தை அழகாக எடுத்துரைக்கின்றது. இவர்களுடைய சரித்திரங்களினால் ஸத்தியப் பிரவர்த்தி, தர்மசிந்தனை, கற்பு முதலிய அரிய குணங்கள் போதிக்கப் படுகின்றமையால், இவைகளை நமது சிறுவர்களுக்கு இளம் பிராயத்திலேயே கற்பிப்பது பெரு நன்மை விளைக்கும்.

**நவசக்தி.**— * * பிள்ளை, தந்தையிடத்தும் தாயிடத்தும் நடந்துகொள்ள வேண்டிய முறையும், மனைவி புருஷனிடத்து நடந்துகொள்ள வேண்டிய முறையும், சகோதரர்கள் நடந்து கொள்ள வேண்டிய முறையும் வேறு பல நீதி முறைகளும் இப்பஞ்சரத்தினங்களின் சரித்திர வாயிலாக நன்கு விளக்கப்பட்டுள்ளன. * * இந்நூல் சிறுவர்க்கும், பெரியர்க்கும் — ஆண் பெண் இருபாலார்க்கும் பயன்படுமாறு நல்ல தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளது. இந்நூலின் உள்ளுறை படிப்போர் மனதைத் தன் வழி ஈர்க்குந் தன்மையது. இந்நூல் ஒவ்வோர் இந்து குடும்பத்திலுமிருக்க வேண்டுவது அவசியமாகும்.

---

***விலாஸம் :—அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.***

# தனபாக்கியம்

அல்லது

# ஓர் அதிர்ஷ்டவதியின் சரித்திரம்

இது ஓர் அனுபவ நாவல்; எளிய தமிழ் நடையில் சகல பிராயத்தினரும் படித்து ஆனந்திக்கக் கூடிய தன்மையில் எழுதப்பட்டிருக்கிறது; ஆரம்பத்திலிருந்து முடிவு வரையில் சுவை ததும்பி வாசிப்பவருக்கு ஆச்சரியத்தையும், பன்முறையும் படிக்க ஆவலையும் உண்டுபண்ணும் விதத்தில் இருக்கக்காணலாம். தனபாக்கியம் என்னும் இக்கதாநாயகியின் பல உன்னதமான குணங்களும், அவளுடைய அறிவு, ஒழுக்கம், அடக்கம் முதலியனவும் இப்புத்தகத்தில் காணக்கூடிய விதத்தில், அவ்வளவு உண்மையாகவும், உயர்வாகவும் பிற நாவல்களில் இது வரையிலும் காட்டப்பட்டிருக்கவில்லை யென்றே சொல்லலாம். ஒரு குடும்பத்தில், தகப்பனுடைய பொறுப்பும், மக்களுடைய கடமையும் வெகு தெளிவாகவும், வாசிப்போர் கைப்பிடித்து ஒழுகக்கூடிய மாதிரியிலும் ஆளப்பட்டிருக்கின்றன. அநேக ஆச்சரியமான சம்பவங்களும், கள், சூது, பொதுமகளிர் விழைவு முதலிய துர்க்குணங்கள் வயப்பட்டார் அடையும் கதியும் அதிக நயமாக விளக்கப்பட்டிருக்கின்றன. நன்னெறி கைக்கொண்டார்க்கு என்றும் உய்வு உண்டென்பதும், என்றும் எவ்விதமாகிய தீப்பயனும் எய்தாதென்பதும் இக்கதையிலிருந்து எடுபடும் திரண்ட கருத்துரையாம். உயர்ந்த தாளில் (8) எட்டு அழகிய ஆப்டோன் படங்களுடன் கூடியது. இப்புத்தகத்தின் விலை இரண்டு பாகங்களும் ரூ. 2—0—0.

# வியாஸ விதானம்

துரைத்தனத்தார் அங்கீகரித்தது

இது, மயிலாப்பூர், பி. எஸ். ஹை ஸ்கூல் முதல் உதவிபோதகரான ஆ. ஸி. கஸ்தூரிரங்கய்யர், பி.ஏ., எல்.டி., அவர்கள் இயற்றியது.

பசு, விகடப்பறவை, புலி, தென்னைமரம், கடிகாரங்கள், காவிரி, விடுமுறை யாத்திரை, வீடு நெருப்புப்பற்றி எரிதல், வித்யாரண்ய ஸ்வாமிகள், மைகேல் பாரடே, தர்மாபிலேக் காவல், சிவாஜியும் அப்ஜல்கானும், ஆறுகள், தபால் ஒழுங்கு, கம்பியில்லாத் தந்தி, பள்ளிக்கூடப் பூரண ஏற்பாடு, பழகப் பழகப் பாலும் புளிக்கும், குரங்கு கையில் பூமாலை அகப்பட்டாற்போல், ஜீவகாருண்யம், பொய்யுரைத்தல், மிதச்செலவு, போட்டி, மனோராஜ்யம், கம்பர், வேர்ட்ஸ்வோர்த், சீதோஷ்ண ஸ்திதியும் மனோநிலையும்.

இவை முதலாகிய விஷயங்களைப்பற்றிய அருமையான வியாஸங்கள் கொண்டது. சித்திரப்படம் அடங்கியுள்ளது. விலை அணு 12.

---

விலாஸம் :—அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

# விஜயபாஸ்கரன்

அல்லது

## ஒரு குற்றத்துக்கு ஒன்பது குற்றம்

(அநேகம் அழகிய ஆப்டோன் படங்களுடன்.)

வரகவி - திரு. அ. சுப்பிரமணிய பாரதி எழுதியது.

புதிய நாவல் விலை ரூபா 2

இந்த நாவல், படிப்பவர்கட்கு பாஷா ஞானமும், நீதி விளக்கமும், அரிய பெரிய கருத்தும், நமது பெரியவரின் நடவடிக்கைகளும் விளங்கக்கூடியபடி எழுதப்பட்டுள்ளது. நடை சிறந்து, கற்பனைகள், அலங்காரங்கள், பழமொழிகள், சம்பாஷணைகள் முதலிய முறைகளைப் பின்பற்றி இருக்கின்றமையின், படிப்பவர்க்கு இது உற்சாகந் தருமென்பதி லையமில்லை. அன்றியும் இது குன்றக்கூறல், மிகைபடக்கூறல், கூறியது கூறல் முதலிய குற்றங்களின்றி, உலகம் நல்வழிப்படவேண்டுமென்கிற நோக்கத்துடனும் மாறுபடா மனநிலையுடனும் பெரியோர்க் கஞ்சி யெழுதியதாதலின் கல்லார்க்கும் கற்றவர்க்கும் மற்றும் எல்லார்க்கும் இன்பமளிக்குமொரு சிறந்த முயற்சியாகும். இதில் லோபகுணம், பொறாமை, காமம் முதலிய இழிகுணங்களினா லுண்டாகும் இழிவும், ஸத்யம், தயை, சாந்தம் முதலிய நல்ல குணங்களினாலுண்டாகும் மேன்மையும் பெரியோர்களுடைய தரிசன விசேஷமும், தெய்வபக்தியின் சிறப்பும், ஆத்மசக்தியின் அபூர்வச்செயலும், இன்னும் இவைபோன்ற பல நன்னடக்கைகளின் விசேஷங்களும் பலவாறான சூழ்ச்சிகளுடன் கூடிய அரிய பெரிய ஆச்சர்ய சம்பவங்களினாலே விளக்கப்பட்டிருக்கின்றன. இதில் நாயகி நாயகர் கரை யமைந்துள்ளவர்கள், அந்யோந்ய தம்பதியாகையினாலே அவர்களுடைய செய்கைகளும், சம்பாஷணைகளும் நடவடிக்கைகளும், உறுதி நிலையும், ஊக்கமும், உள்ளக்கிளர்ச்சியும், படிப்பவர் வியந்து பேசும்படியா யிருக்குமென்பது துணிபாம். இது ஒரு பெரிய நாவல், விலை ரூபா 2.

---

விலாஸம்:— அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.